மாருத வல்வினைநோய் மாற்று னென்னீர்.......................※
மாசறுத்நாட் கொண்டருள வந்தா னென்னீர்...................※
தேருதா ருள்ளத்தாச் சேரா னென்னீர்..........................※
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்....................(௬)

இந்திரசா லம்போல வெல்லாந் தன்னு.............................※
ளிதமிதமா கக்காட்ட வல்லா னென்னீ.............................※
ரந்தரமொன் றின்றியெல்லாங் காண்பா னென்னீ..........※
ரண்டர்க் கறிவரிய வத்த னென்னீர்...............................※
தொந்த விருண்மாய்த்த சுடரோ யென்னீர் .....................※
துணையடியென் சென்னிமிசை வைத்தா னென்னீர்........※
சிந்தையுள் ளேமன்னிச் செறிந்தா னென்னீர் ..............※
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர் ....................(௭)

அன்னையினு மென்றனக்கு நல்லா னென்னீ....................※
ரமிர்தத்து வான்சுவையே பயனே யென்னீ.....................※
ரென்ன யெனக் கென்றோலே யென்னிற்றந்த...................※
வின்னமிர் தேயென்னீ ரிறைவா வென்னீர்......................※
பன்னுமறைக் கெட்டாத பாதா வென்னீர்.......................※
பழவடியார் பண்டாரப் பொருளே யென்னீர்..................※
சென்னிமிசைக் கழல்சூட்டி யாண்டா னென்னீர் ..........※
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்......................(௮)

பொல்லாவென் பொல்லாரைத் தேடி யாளப்.....................※
பூமியினின் மானிடனாய்ப் போந்தா னென்னீர்...............※
நல்லார்க ளெல்லாரு நிற்க நாய்க்கு...............................※
நற்றவிசிட் டெனையாண்ட நாதா வென்னீர்...................※
கல்லாமை கற்பித்த காளா யென்னீர்..............................※
கருணைத்த டங்கடலே யென்னீ ரென்னீர்.......................※
செல்லாத யீனாத செல்வ மென்னீர்................................※
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்.......................(௯)

ஒப்பொருவ ரில்லா வொருவ னென்னீ............................※
ருத்தமர்க் கேகண்ணு யுதித்தா னென்னீ,.........................※

றெப்பொருளுந் தானா யிசைந்தா னென்னீ........... ......✳
றிடையறு வானந்த வெள்ள மென்னீர்.............................✳
தப்பறவே யென்னைவலிந் தாண்டு கொண்டு.... ...... .....✳
தாளிணையென் சென்னிமிசை வைத்தா னென்னீர்..........✳
செப்பரிய சுவானுபவத் தேற லென்னீர்........ ..................✳
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்...................(௰)

அன்னாறு முள்ளத் தடியார் மெய்யி............. ................✳
லணுகிநோ யிணையறுத்திட் டினிமே லொன்று...............✳
நன்னாமை காத்துவந்த நம்பா வென்னீர்........... .........✳
நானேநீ யாய்நயந்த நாதா வென்னீர்.............................✳
வின்னாமை யோர்கணமு மடியார் கூட்டம்........ ...........✳
விரவியினிக் குறைக்காலம் போக்க நாயேற்........... ........✳
குள்ளானே யருளியினி யுடலம் வீபோ ........................ ...✳
துணர்ந்திருந்தே யொழிவிப்பா யென்னீ ரென்னீர்.....(௰௧)

ஆ-பாடல் - ௧௮௪.
இளிப்பயிற்று - முற்றிற்று.

## ௪௫-வது
## குறையுரைத்தல்.

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

கொண்டான் குருவனே கூர்மைய றீராதேற்.............. .....✳
கண்டா ருயிருண்ணுங் கண்டக னென்பேனோ.............. (௧)

என்பணி கொண்டென்று மின்புரு னேன்மையை...... .....✳
வன்ப ருயிருண்ணு மறவன்கா னென்பேனோ (௨) ஆ-௧௮௬.

குறையுரைத்தல்முற்றிற்று.





உ

கணபதி துணை.

# ஸ்ரீ-வரது, வரவுசாற்றல்.

அடி நான்காய்த் தம்மிலொத்து வந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தோரணங்கணாட்டு* மேடோ சோலையெங்குஞ் செய்யுமேடோ
தாணுறைகள் பொதிந்தெங்குந் துய்யவிளக்கேற்றுமேடோ*
வாரணமு மயன்முதலா மமரருமங் கயர்வுறவே..... ......*
யாதனை வனையாண்டுகொள்ள வாரியன்காண் வருகின்றான்.(க)

வீதியெங்கும் வெள்ளைமணல் பரப்பிநீரை விடுமேடோ.*
வெற்றிக் கொடியுடனே விதானமேற் கட்டுமேடோ.....*
வாதிவேத நாலுமுரா சாகவறைந் தாடுமேடோ............*
வன்பருள்ளரங்கோயில் கொள்ளவெங்கணாதர் வருகின்றார். (உ)

சோகமோ காதியெல்லாந் தணித்துநீர் விடுமேடோ....*
தொந்தமுற்ற பந்தமுற்றுந் துவக்கறுத் திடுமேடோ....*
வாகமாக வருளாலே யவையவுங்க ளதுசாத்தி..............*
யாறவடி வைத்தவெங்க ளண்ணலார்காண் வருகின்றார்...(ங)

வீணைவங்கி யங்களாலே வேதகீத மோதுமேடோ..........*
விழுந்தெழுந்திங் கோலமிட்டு விரகழிந்திட் டாடுமேடோ*
பேணுமன்ப ராவியுண்டு பேராதுள்ளரங் கோயில் கொள்ளப்
பெத்தமுத்த மற்றவின்பப் பெருமானார் தாம்வருகின்றார்.(ச)

பூமியெங்கும் பொற்பூமாரி பொழிந்துநின் றிடுமேடோ*
பூரணப்பொற் குடங்களும் பூவிரிய மெடுமேடோ..........*
தாமமெங்கு நாற்றுமேடோ தலையினா டுமேடோ.....*
தம்மையன்பர்க் களிக்கவென்று தம்பிரானார் வருகின்றார்(ரு)

ஆக பாடல் - ௩௧௧.

---

* ஏடீர் கேளீரென்பன ஏடோவெனப் பன்மை ஒருமையாய் வந்த வழுவமைதி.

வரவுசாற்றல் முற்றிற்று.



உ

கணபதி துணை.

சு ஏ - வ ரூ’ு

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

## ஸ்வரூபானந்தஸ்வாமிகள் அர்ச்சனை.

அடியிரண்டாய்த்தம்மி லொத்துவந்த
குறள் வெண்செந்துறை.

என்னைக் குறித்தா னொழிலார் திருமேனி.......................※
மன்னர்க் கிடும்பீட மதியிலேன் காதலே......... ........(௧)

ஓது மறைக்கு மும்பர்க்கு மரியவவர்..... ......... .... .........※
பாதம் விளக்குநீர் பண்பிலே னீர்மையே..... .............(௨)

தேசுக்குத் தேசாந் திருவான மேனிக்குப்....... ...............※
பூசப் படுஞ்சாந்தம் புலையேன் மனத்தன்பே...... .... (௩)

பார்த்ததெல்லாந் தானாய்ப் பழுதற்ற சோதிக்குச்... .......※
சாத்தும் பரிவட்டந் தமியேனேத் துஞ்சொல்லே..... (௪)

தேடிமூவர் வாடச் சிறியோமை யாண்டவர்க்..................※
※காடு மஞ்சன மறிவிலேன் கண்ணீரோ...... ...... .......(௫)

ஏத்துமன்ப ருள்ளத் தின்பமா மீசர்க்குச்.......................※
சாத்துங் களபமுஞ் சதுரிலே னசையே.......................(௬)

இணையேது மில்லாத வெழிலார் திருமேனிக்............ ... ※
கணியா பரணமு மறிவிலே னூர்வமே........................ (௭)

---

※ ஆட்டுமென்பது - ஆடுமெனப்பிறவினை - தன்வினையாய்வந்தது.

துணையன்றி யொன்றிலாத் தம்பிரான் றிண்டோண்மேற்,
புனையுந் திருமாலை புலையென்சொன் மாலையே......(௮)

பாங்காக வந்தெம்மை யாட்கொண்ட பண்பர்க்குப்........※
பூங்கோயி லாவதென் புழுவார் குரம்பையே.. ........(௯)

தூற்றுஞ் சுருதிக டொடர வரியவர்க்.....................※
கேற்றுநந் தாவிளக் கெழிலாரு ஞானமே. ............ (௰)

செல்லறீர்த் தென்சிந்தை மேவிய செல்வர்க்கு.........※
நல்லதூ பந்தீப நாயேன் மனத்தன்பே.................(௰௧)

எங்காத துள்ளேநின் றின்பஞ்செ யீசர்க்குச்..............※
சிங்கா சனமென்றுந் தெளிவிலென் சிந்தையே......(௰௨)

சாற்றுமறைக் கெட்டாத தம்பிரா னார்தமக்..... ........ .....※
கேற்றும் பரிகல மேழையே னுள்ளமே..... .............(௰௩)

நோக்கரிய மேனியது நுண்ணுணர்வா யீசர்தமக்.... .... ※
காக்கிய போனக மறிவிலே னவியே............ .......(௰௪)

ஐயமறுந் தாரு மழகார் சுருபர்க்குச்.................... .......※
செய்ய வமிர்தென்றுந் தெளிவிலென் சிவனே.... ....(௰௫)

ஆனதி லாகாத வானந்த நாடர்க்குப்..............................※
போனக மாவது புலையே னுயிர்தானே....................(௰௬)

தெள்ளத் தெளிவாகுஞ் சிற்பிர காசர்க்குக்.................※
கள்ளப் பொறிபுலன் கறியமு தாகுமே......... .......(௰௭)

போற்றுமன்பர் நெஞ்சிற் பொருவில் சுருபர்க்............ ※
கேற்றுங் கறியென்ற னிடலை யாவுமே.......... .....(௰௮)

கண்ணுக்குக் கண்ணாகுங் கருதரு மீசருக் ............... .......※
கெண்ணாய பதிங்கறி யெல்லாமென் பாசமே...........(௰௯)

செப்பரிய மேனியெங்கள் சிற்பிர காசர்க்கு ..................※
முப்பழ மென்குண மும்மல முற்றுமே ................ (௨௰)

ஞாலமெலா மாகி நின்றிடு நாதர்க்குப்.........................※
பாலுடன் றேனுமென் பாவக முற்றுமே... ............(உக)

இக்காலா தியொன்று மில்லாத செல்வருக்.......... ...........※
கக்கார மாவது மென்மதி யாகுமே...... ...................(உஉ)

அறிவு வடிவாக வருள்செய்த வீசர்க்கு.............................※
நறுநெ யமிர்தென்று நாயேன் பவந்தானே. .........(உ௩)

விண்ணோர்கள் வாடமண்ணோர் வீறெய்த வந்தார்க்குத்....※
தண்ணீ ரமிர்தென்றுந் தாவில்லா மாயையே..... .....(உ௪)

உளையற்றே யென்வண யுண்டார்க் கடைகாயும்..............※
வருமென்மூவேழ் சுற்றமும் வன்பவம் யாவுமே..... (உரு)

இழுகற்ற சிற்பர மாகிய செல்வர்க்கு........ .....................※
நலகற்பூர மென்வண நண்ணுவோ ராவியே.............(உ௬)

வார்த்தையொன் றுலேயென் வன்பவ மாய்த்தார்க்குத்.. ※
தோத்திரந் தானென்றுச் சொல்லுவ தெல்லாமே... (உஎ)

தாமே தமக்கொப்பாந் தத்துவ நாதர்க்குப்.........................※
பூமாரி யாவதென் புன்றலை தாழ்வதே (உஅ) முற்றிற்று.

---

# ௪அ-வது, அனுபூதிநிலயம்.

(கவித்தாழிசை)

தல்லுந் தொம்முமானு யென்றுநீர் போகாதீர்.. ..........※
சற்றே மதித்துக் காட்டீர்....... ....... ........... ........... ..※
புல்லியுமைத் தந்தினிப் போகலா மோதான்..... ...... ......※
பொன்னி வலஞ்சு ழீரோ. ......... ... ..................... ........ .※
போதக் கயிற்றாலே கட்டிக்கொண் டுள்வைத்தேன்........ .※
போகலா மாகிற் போகீர்....... .... .... ................ ..........※
போதப் பெருமானே பூரண போதரே............. .......... ※
போகலா மாகிற் போகீர்......................... ................ (க)

வேதங் கீதைசொல் விற்றென்று நீர் போகாதீர்.... ........※
மெய்யும்மைக் காட்டித் தந்நீ.... ........................※
ராதிபுராணரோ யானந்த நாடரோ........ ........................※
யங்ஙனே போக லாமோ........................ ..........※
வள்ளுறு முள்ளத் தணையிட்டு வைத்தே...................※
ளங்ஙனே போக லாமோ........ ............... ...... ..........※
வாதிபுராணரோ யானந்த நாடரோ........ ..... ... .............※
யங்ஙனே போக லாமோ............ (௨) ஆ. பாடல் - ௪௨௧.

அநுபூதிநிலய முற்றிற்று.

---

## ௪௧-வது. உயிருணி.

---

கலிவிருத்தம்.

மறைநான்முக னரன்வானவர் மயல்கொண்டின மயரப்..※
பொறையாமுட லுரவாயுமல் புலையேன் பொருளாக...※
முறியாவெழு முழுவின்பம தருவாகிய முதல்வ.........※
னறைகூவியெ னகமன்னிய வருடானதி சயமே.........(௧)

பூதங்களை நானென்றுரை போதம்முன் ராதே..............※
வாதம்பல சொல்லியவ மேமாய்வுறு வேனை................※
வேதங்களு மறியாமல ரடிசூட்டிய விகிர்தன்..... ............※
பேதங்கெட வுள்வந்ததமை பேசவறி யேனே..............(௨)

காணேனவ னன்றிப்பிறி தொன்றும் முறைவாக.............※
நாணேனடு வில்லாமையி னன்றும்மது வன்றும்...........※
பூணேனினி யொன்றும்புனி தன்றுணை யன்றி ..........※
வீணேசெய்தே னுவமன்னிய விகிர்தன்செய்த விரகே.. (௩)

எறிமாருத மெனவேருறை மனமா மயறவிர....................※
மறியாவுள மழியாவறி வுருவாகிய வுரவன்..... ....... .....※
செறிவார்கழ லிடையென்றனை சேர்த்தியெனை யாண்ட.....※
தறியேனுள மழியேனரு விலையேன்செய்த வவமே....(௪)

பலவொன்றென வறியேன்பக விரவென்பது மறியே....※
னலதொன்றையு மறியேனறி வானந்தம தறியே.... ......※

துடித்துமனம் புலன்வழியே தூறுசெய்து மாறுபடுந் துவணயி லேவணு, யடித்தடித்துப் பாலூட்டி யானந்த மெனக்களித்தா னச்சோ வச்சோ..................................(உ)

சாதலென்றும் பிறத்தலென்றுந் தடுமாறு மிருவிணையின் றளையை வாங்கி, யாதலென்று நடராசன் றிருவுருவ மெனக்களித்தா னச்சோ வச்சோ..........................................(ஙு)

நட்டாருந் தம்முடனு நலம்போலப் பொய்நடித்து நலமி லாதேன், பட்டாருங் கண்டிருந்தும் பழவடியா ருடனுண் டா னச்சோ வச்சோ..........................................(ச)

குடிமைகுல மாச்சிரமங் கோத்திரசூத் திரமனைத்துங் குலை ந்து போக, வடிமைகொண்ட நடராசன் றிருமேனி யெனக் களித்தா னச்சோ வச்சோ..........................(ரு) ஆ-சுகூச.

---

*உம்மையிடைச்சொல். *பட்டாருத வுமென்பதுபட்டாருமெனவிகாரமாயிற்று

அச்சோமுற்றிற்று.

---

ருஙக - வது
சிவப்பிரகாசஸ்வாமிகள்

# நல்லேன்.

குறள்வெண்செந்துறை.

செய்ய மேனிக்கு நல்லேன் றுய்ய.................................*
செங்கனி வாயிற் சிரிப்புக்கு நல்லேன்...............................*
மைய நீர்த்தார்க்கு நல்லே னென்னை.................................*
வாழ்வற வாழ்வித்த வண்மைக்கு நல்லேன்............................(க)

ஆரா வழகுக்கு நல்லே னணிய..........................................*
னணிந்த மடமைக்கு மார்புக்கு நல்லேன்...............................*
சீரார் கருணைக்கு நல்லே னையன்...................................*
றித்தித்த வார்த்தைக்கு நல்லே னல்லேன்............................(உ)

பார்த்த பார்வைக்கு நல்லேன் செய்ய.................................*
பங்கயக் கண்ணுக்கு நல்லே னல்லேன்.................................*
வார்த்தைக் குச்சால நல்லே னென்னை.................................*
வாழ்வித்த காலுக்கு நல்லே னல்லேன்...............................(ங)

கூடு நோக்குக்கு நல்லேன் ஞானக்...................................................✻
குற்றுடை வாளுக்கு நல்லே னல்லேன்.............................................✻
வீரன் காலுக்கு நல்லேன் கட்டும்......................................................✻
வீரக் கழலுக்கு நல்லே னல்லேன்...............................................(௪)

மீட்ட விரலுக்கு நல்லேன் மேனி ...............................................✻
விட்டுப் பொழியுங் கருணைக்கு நல்லே..........................................✻
நாட்ட வருளுக்கு நல்லே னெங்க...................................................✻
ஞாதர் சிவப்பிர காசர்க்கு நல்லேன்............(ரு) ஆ௨௪௪௬

நல்லேன் முற்றிற்று.

## ருஉ - வது, ஐயகோ.

ஊடியும் போகில னையகோ..................................................................✻
வூதறியும் விடுகில னையகோ............................................................✻
பாடலின் பழியில னையகோ...............................................................✻
படிறுசெய் தெனமாய்த்தா னையகோ...............................................(க)

வலியப் பிடித்தாண்டா னையகோ......................................................✻
வாயைப் புதைத்தாண்டா னையகோ...................................................✻
கலவிக்க ளாடாண்டா னையகோ.......................................................✻
கண்ணேகன் னாக்கண்டா னையகோ...............(உ) ஆ௨௪௪௮.

ஐயகோ முற்றிற்று.

ருகூ - வது, தாய்வார்த்தை.

## இது- ஸ்வரூபானந்தஸ்வாமிகளது

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள் வெண்செந்துறை.

வாசாம கோசரம் வந்ததென்றாள்...........................................................✻
வானவ ரோமாக்க மாமலர்த்தாள்.......................................................✻
கூசாதென் சென்னியில் வைத்ததென்றாள்.........................................✻
குளித்தாள்கண் ணீர்கொண்டு கோதைதானே.................................(க)

சென்னியில் வைத்த கரங்களென்று ........................*
டிருக்கற நோக்கிய நோக்கமென்றாள் ........................*
வன்னிமுன் வைத்த மெழுகதென்ன ........................*
மாறா துருகினாள் வாணுதலே ........................(௨)

தீண்டுவ னேசெய்ய பாதமென்று ........................*
டிருமாலுங் கண்டில னேடியென்று ........................*
றாண்டவ னேயென்றாள் பின்னையொன்று ........................*
மறிந்தில னேயென்றா ளாயிழையே ........................(௩)

வாசக மொன்றென்று விட்டிறவி ........................*
மாண்டதென் றாள்செய்த வல்லபந்தான் ........................*
பேச விரகில்லை காணுமென்றாள் ........................*
பேசா திருந்தாளென் பேதைதானே ........................(௪)

உன்ன வரிய பொருளதென்று ........................*
ளோதவொண் ணாதென்றா ளப்பொருளைச் ........................*
சொன்ன விரகென்றாள் பின்னையொன்றுஞ் ........................*
சொல்ல வறிந்தில டேம்மொழியே ........................(௫)

எத்திக் கடையேனை யாண்டதென்று ........................*
வெப்போது மின்னமிர் தாகிநின்று ........................*
தித்திக்கு மேதிரு வார்த்தையென்றாள் ........................*
செய்வ தறிந்திலள் சேயிழையே ........................(௬)

கைம்மாறு காணேன் கருணைக்கென்றாள் ........................*
கம்பித்தாள் காயங்கண் ணீர்சொரிந்தாள் ........................*
விம்மா வழுதாள்பின் செய்தசெய்கை ........................*
விளம்பு மளவோவென் மெல்லியலே ........................(௭)

ஒத்தாவ தேயடி யோனுமென்று ........................*
வின்ன மறியா மறைகளென்றாள் ........................*
சாத்துவ தேதிரு மேனியென்று ........................*
டரிக்க வறிந்தில டையருமே ........................(௮)

உரியேனல் லேன்மதி றொருவர்க்கென்று ........................*
ளுடையா னடிப்போ தொருங்கணமும் ........................*

பிரியே னெனச்சொன்னாள் பேச்சொழிந்தாள்............✻
பித்தியா னாளென்றன் பெய்வளையே.................(௯)

ஒருமேனி கொண்ட பரிசேயென்று.......................✻
முள்ளத்தா னுள்ளவொண் ணாதென்று...................✻
டிருமேனி யெல்லாங் கருணையென்றாள்..................✻
செய்ய சுரூபனென் றுடிருவே.................௰, ஆ௨ சஉ௫

தாய்வார்த்தைமுற்றிற்று.

---

௫௰ச - வது, தோழியுரைத்தல்.

---

குறள்வெண்செந்துறை.

குருபர னென்றாள் கோலமென்றாள்.............................✻
கோதி லருட்குணக் குன்றமென்றாள்............................✻
பெருமறை காணாது பீடுவாடப்..................................✻
பேயேற் கெளிவந்த பித்தனென்றாள்.............................(௧)

கருணை பொழிகின்ற கண்களென்றாள்..........................✻
கருக்கெட வைத்த கழல்களென்றாண்..........................✻
மருளற வென்னைத்தா னாக்குவித்த............................✻
வல்லப மென்றாள்பின் வாக்கிறந்தாள்.........................(௨)

பூங்கோயி லென்றாள்பொற் பீடமென்றாள்,......................✻
புனிதனை ரென்றாள்பொன் மேனியென்று......................✻
ணாங்காண வந்த நலமதென்று.................................✻
ணயனநீர் மல்கி னணிழந்தாள்...............................(௩)

மீட்ட விரகென்றாள் வேறுகாணாள்.............................✻
விழியால்வே தித்த வீரமென்று................................✻
ணாட்ட வரிதென்று ணாடவொண்ணா............................✻
நலமாஞ் சிவப்பிர காசனென்றாள்..............................(௪)

செய்ய திருப்புன் முறுவலென்று.............................✻
டிருவான கோலத்தின் சீர்மையென்றாண்.........................✻
மெய்ய னுரைக்கு முரையிதென்றாள்...........................✻
விம்மினண் மேன்மேலு மேவினளே............................(௫)

செய்ய வழகென்றாள் சென்றடையாத் ............ ✻
திருவென்றாள் சீமான் சுரூபனென்றாள் ............ ✻
பையப் பவம்பாழ் படவிழித்த ............ ✻
பார்வையென் றாள்பார்ப் பற்றனளே ............ (௬)

செந்தா மரைமுகஞ் செய்யவாய்கண் ............ ✻
திருப்பாதங் கைகளுஞ் செய்யமேனி ............ ✻
யந்தா மரைபெற்ற தார்பெறுவா ............ ✻
ரகத்தா மரையா லமிர்தமென்றாள் ............ (௭) ஆ_சசு௰.

தோழியுரைத்தல் முற்றிற்று.

## ௩௩-வது, எம்பாவை.

குறள்வெண்செந்துறை.

உண்பானு முடுப்பானு முழல்வானு முடல்சாத்திக் ............ ✻
கண்காண வரிலதுகலக்கறுமோ வெம்பாவாய் ............ (௧)

ஆண்பெணவி யணைத்துயிர்க்கு மாதார மாயிடினுங் ............ ✻
காண்படியே வரினலது கலக்கறுமோ வெம்பாவாய் ............ (௨)

ஆ_சசு௨.

எம்பாவைமுற்றிற்று.

## ௩௬-வது, அக்கைச்சி.

குறள்வெண்செந்துறை.

பிணஞ்சுடு தடியென்ன வெள்ளணக் கொண்டே ............ ✻
பெரும்பற்றை யெல்லா மறச்சா டி ............ ✻
யணைந்த வெள்ளையு மப்படி யீறில்போ ............ ✻
தத்தில் விட்டனு போகத் திருந்தானே ............ (௧)

ஆதி மாயையென் னக்கைச்சி யந்த ............ ✻
வாண்மக னுற்ற போதே கெட்டேன் ............ ✻
போதந் தானுஞ் சுமையென்று வீறில் ............ ✻
போதத்தில் விட்டனு போகத் திருந்தானே ............ (௨)

ஓது மாயையென் னக்கைச்சி யொப்பிலா ........................ ※
னென்னுற வுற்ற போதே கெட்டேன்..... .... .................... ※
போதந் தானுஞ் சுவையென்று வீறில் ................ ......... ※
போதத்தில் விட்டனு போகத் திருந்தானே..(௩) அடி ௪௱௫.

அக்கைச்சி முற்றிற்று.

---

௫௭-வது,

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

# மால்.

குறள் வெண்செந்துறை.

சால மாலானே னம்மே யென்வணத்........................ .....※
தானுகப் பார்த்தசெந் தாமரை கண்ணுக்குச்................. ※
சால மாலானே னம்மே...............................................※
ஞாலங் காண்கிலே னம்மே யெங்க........ .........................※
ஞையனுர் தந்திரு மேனியல்லான்............................. ...※
ஞாலங் காண்கிலே னம்மே...... ................... ...........(௧)

பேச வறிகிலே னம்மே தன்றன். ...... ............... ...........※
பேரா வருளும் பெருந்தன்மை யுங்காட்டிப்....................※
பேராசை யாக்கினு னம்மே... ..... ....... ................... ... ※
தேசு திகழுங்கா ணம்மே யெங்கள்...................................※
செய்ய சிவப்பிர காசன் திருமேனி.....................................※
தேசு திகழுங்கா ணம்மே..... .... ....................௨, அடி ௪௱௭.

மால் முற்றிற்று.





௨

கணபதி துணை.

# ௫ அ-வது,
# சிவப்பிரகாசஸ்வாமிகள்
# குரவை.

அடி நான்கார்ப்பத்தம்பிலொத்துவந்த இரட்டைக்குறள்வெண்செந்துறை.

சதுமறைக் கரியதா டமியனுக் கௌிவந்த.....................❊
தன்மையைப் பாடியே குரவையிடு......... .....................❊
தம்பிரா னெனையாண்ட கருணையின் பெருமையைச்....❊
சகமெலா மறியவே குரவையிடு ...... ......................... .....❊
கதுவுமுற் பவந்தனைக் கணத்தினிற் கருவறக்......................❊
கடைக்கண்வைத் ததைபாடிக் குரவையிடு... ..................... ❊
கல்வியு மழிந்தது கருத்தெல்லா மிறந்தது...... .. ...........❊
கண்ணேகண் ணாய்த்தென்று குரவையிடு....... ..............(௧)

ஒப்பிலா வொருமொழி யதனைலே முழுதையு ..............❊
மோதிய வளம்பாடிக் குரவையிடு............................ .....❊
ஒழிநிலை யாய பவபாச மொருகணத்...............................❊
தொழித்தவா றதுபாடிக் குரவையிடு............. ..... ..... ...❊
செப்பிட வரியதோர் தெளிவந்தெ னுளநின்று.............❊
சித்திக்குந் திறம்பாடிக் குரவையிடு ...... ...... .......... ......❊
சிறியோமைப் பொருளாகத் தேடிவந் தாட்கொண்ட..... ❊
செய்யசே வகம்பாடிக் குரவையிடு ............................(௨)

உலகேழும் விழுங்கிய வொளியாகு முணர்வையு..............❊
முண்டவொண் கழல்பாடிக் குரவையிடு..... .......................❊
வுருவாகி யருவாகி யலவாகி யொழியாத .........................❊
வுண்மையா னிலைபாடிக் குரவையிடு.................................❊
சலமாரு மதியென்னக் குலையுமென் னுளனேதற்...........❊
சிவமாக்குந் தகைபாடிக் குரவையிடு...................................❊
சதுரான மொழியும்புன் முறுவலுந் தமியேனைச்.......❊
சதுராழித் ததைபாடிக் குரவையிடு...... ....... ....௫, அ-உ, சஎ௰

குரவைமுற்றிற்று.





கணபதி துணை.

ஸ்ரீ சு - வ ரு

# ஸ்வரூபானந்தஸ்வாமிகள்.

## குணவஃ.

அடி நான்காய்த் தம்மி லொத்து வந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

மறைசொ லும்பொருண் மனித வேடமாய்.................. ✻
வந்த தென்றிடு குணவை.......................................... ✻
மாலு மாலுறும் பதமென் சென்னியில்............................ ✻
வைத்த தென்றிடு குணவை........................................ ✻
யறைக டற்றிரை மனமி மைப்பிலே................................ ✻
யழிந்த தென்றிடு குணவை......................................... ✻
யறிவு ருவமா யவ துகண்டிட......................................... ✻
வரிதாய்த் தென்றிடு குணவை...................................... (௧)

இறந்து போய்வரும் வழிதூர்ந் தபுவ்............................... ✻
வெழுந்த தென்றிடு குணவை....................................... ✻
யிவ்வு டம்பொடே யிருந்து முத்திக்கே............................ ✻
யிருந்தோ மென்றிடு குணவை...................................... ✻
மறந்து முன்னியு மிராத போதமாய்................................ ✻
வாழ்ந்தோ மென்றிடு குணவை...................................... ✻
வள்ள லாரருள் செய்த வல்லப....................................... ✻
மறவோ மென்றிடு குணவை........................................ (௨)

சுருதி களொரு கோடி சொல்லியுந்.................................. ✻
தோன்று தென்றிடு குணவை........................................ ✻
சுருபா னந்தனோர் சொல்லி லானந்தந்............................. ✻
தோன்று மென்றிடு குணவை........................................ ✻
கருத வொண்ணாத பொருளைக் கண்ணாலே......................... ✻
கண்டோ மென்றிடு குணவை......................................... ✻
கருணை யங்கழ றன்னைக் கண்டுகண்............................... ✻
களித்தோ மென்றிடு குணவை....................................... (௩)

சொலவி னிவ்வரு கலைய லைலலைத்.........................*
தொலைத்தோ மென்றிடு குணலைச்.........................*
சொலவ றுஞ்சுக சுருப வாரியிற்.........................*
சுகித்தோ மென்றிடு குணலை.........................*
மலைவு டலினின் மதிசெ யும்மதி.........................*
மறந்தோ மென்றிடு குணலை.........................*
மதிய ழியவே வருமதி யையு.........................*
மதித்தோ மென்றிடு குணலை.........................(௪)

நிரந்தர விரிய வெள்ள மெங்கணு.........................*
நிறைந்த தென்றிடு குணலை.........................*
நிகில மென்பது மறவியுங் கூட.........................*
நிகழா தென்றிடு குணலை.........................*
யிருந்து பாரொன்ற விரகையெப் பொழுது.........................*
மியம்பி நின்றிடு குணலை.........................*
யிப்ப டியேநாம் வாழத் தந்தானை.........................*
யேத்தி நின்றிடு *குணலை (௫) ஆகூ சஎரு. குணலைமுற்றிற்று.

## ௱௰ - வது, பகடி.

அடி நான்காய்த் தம்மி லொத்து வந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

கழியாமை யூழியூழி யுறவாகி வருகின்ற.........................*
கருவினை நாசனென் றிடுபகடி.........................*
கண்டிருந் தெனையாளக் கழல்காட்டிக் கொடியிட்ட.........................*
கருணாமா மலையனென் றிடுபகடி.........................*
விழியாலே தனையாக வெனைமாளச் சதுரிசெய்த.........................*
விரகினை யுடையானென் றிடுபகடி.........................*
விரவியே யுடலுயி ருலகெங்கண் முழுதையும்.........................*
விரவாத வீரனென் றிடுபகடி.........................(௧)

சதகோடி விதமாக வெழுந்திடுஞ் சடங்கினைச்.........................*
சாடிய சதுரனென் றிடுபகடி.........................*

* குணலை என்பது - வீராவேசத்தாற் கொக்கரித்தல்.

சதுமறை பொருளுமவர் தலையுற் வணங்கியுஞ்.................✻
சாருதற் கரியானென் றிடுபகடி.................................✻
மதமானந் துணையாக வஞ்சத்தே செலுமென்னை.........✻
வவிந்துவந் தாண்டானென் றிடுபகடி...........................✻
வாசாம கோசர வடிவினை மலர்க்கைதயின்.......................✻
மணியென்ன வளித்தானென் றிடுபகடி.......................(௨)

அறிவானே டறிபொரு ளாகியே யெழுஞ்செல................✻
வழகுறத் திரித்தானென் றிடுபகடி................................✻
யறிபொரு ளறிவினி லறிவித்தவ் வறிவையு .................✻
மறிவானி லழித்தானென் றிடுபகடி..............................✻
பொறிபுலன் கரணங்கள் புகல்சீவ பரனென்னும்...........✻
பொருளற விழித்தானென் றிடுபகடி..............................✻
பொருவில்லா வொளியாகிப் புரையற நிறைந்துள்ள.....✻
பூரணமே யானேமென் றிடுபகடி..................௩, ஆ௨சஎஅ.

பகடிமுற்றிற்று.

௩௧-வது

# சுரூபானந்தசுவாமிகள்

# கழல்.

## கலித்தாழிசை.

ஒன்றியசிந்தையுளொன்றாய்நிகழுமே - யின்றெனையாண்
டவனின்பக்கழ -லிதுவென்னவொண்ணாதவிறைவன்கழல் (௧

இருந்துதி கொண்டென் பிறவிநோய் தீர-மருந்தாகி மண்
ணின்மேல்வந்தகழல் - மற்றொன்றுமில்லா தவள்ளல்கழல்(௨

முத்தி யடியேன்கண் முன்னே நிகழ்ந்திட - வெத்தியெனை
யாண்டவின்பக்கழல் - யெல்லாமாயல்லாவிறைவன்கழல்.(௩)

நாநா விதந்தீர நாடரி தாய்வெறுந் - தானாகத் தந்த
தலைவன்கழற் - றூவா மறைதேர் தனிப்பொற்கழல்... (௪)

அஞ்சாதே யென்றவ் வரந்தை யழியவென் - குஞ்சிமேல்
வைத்தகுரவன்கழல் - கூற்றத்தைக்கொன்றகுழகன்கழல்(௫)

ஆறும் படிநல்கி யாறு நெறிகளும் - வேறின்றி நின்று
விளங்குங்கழல் - மெய்யுணர் வாய்நின்ற வீரன்கழல்...(௬)

ஏழை யடியே னெழுபிறப் புங்கெட - வூழி முதல்வ னு
ணர்த்துங்கழ - லுணர்வான வானந்த வுண்மைக்கழல்..(௭)

எண்ணு வமரர்க்கு மெட்டரி தாகியென் - கண்ணான கண்ணு
ரமிர்தக்கழல் - கடையேனை யாண்ட கருணைக்கழல்......(௮)

ஒன்றுரு முற்றுரு மில்லா வகையென்னைத் - தன்னாகத்
தந்த சதுரன்கழல் - சங்கை யறுக்குந் தலைவன்கழல்(௯)

பத்தி யடியவர் சித்தத்து ளேநின்று - தித்தித்தமிர்தா றுந்
தெய்வக்கழல் - சிற்சுரூ பானந்தர்செம்பொற்கழல்.. ......(௰)

கழல்முற்றிற்று. ஆடசஅ.

---

௬௨-வது.

ஸ்வரூபானந்தஸ்வாமிகள்.

# அம்மானை.

---

## இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அஞ்சின் பிணக்கை யறுக்கலா மம்மானை......................*
யன்னிய மொன்றற் றிருக்கலா மம்மானை.......... ..........*
துஞ்சும் பிறவி துடைக்கலா மம்மானை........................ *
சுரூப னடியிணை சூடினு லம்மானை........................ (௧)

கண்மூடிக் காணா நிலையார்கா ணம்மானை.......................*
கண்மூடு வார்தம்மைக் காணுர்கா ணம்மானை.... ..... ......*
விண்மூடுஞ் சோதி விளங்குமே லம்மானை........ ..........*
விழியா துறங்கா திருக்கலா மம்மானை.... ................(௨)

காலநிலை தேசங்கள் கண்டோநா மம்மானை ................*
காணுநமை யவைதாங் காணுகா ணம்மானை.... ..............*
கோல மறிவல்ல தில்லைகா ணம்மானை.............................*
கொள்கைகொள் ளாமை குலைந்தோங்கா ணம்மானை. (௩)

அல்லும் பகலு மறியோங்கா ணம்மாவணா..........................✻
யானந்த மேவடி வானேநா மம்மாவணா..........................✻
சொல்லும் பொருளுங் கடந்தோநா மம்மாவணா..........................✻
சுரூபானந் தத்தின் சுதந்திரமா மம்மாவணா, ௬, அ, ௬௯௨.

அம்மாவணைமுற்றிற்று.

---

ஸ்ரீ உ-வது, பந்து.

இஃது.

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

## ஸ்வரூபானந்தஸ்வாமிகளது.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஓதா ரணங்க ளுயர்ந்து போற்று..........................✻
மூண்மை யுணர்விவ் வுலகுக் கெல்லா..........................✻
மாதார மாகிய வப்பொ ருளே..........................✻
யருளே வடிவா யெழுந்த ருளி..........................✻
யூதாரி யாய்நா னழியா வண்ண..........................✻
முச்சியின் மேலே யுவந்து வைத்த..........................✻
பாதார விந்தங்கள் பாடிப் பாடிப்..........................✻
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்..........................(௧)

கொடியிடை யார்கனி வாயுங் கண்ணுங்..........................✻
கொங்கையு மென்று குலாவு மாந்தர்..........................✻
நொடியிடைப் பட்டு நுடங்கு வேணா..........................✻
நோவாமே நோக்கியென் னோரா வுள்ளச்..........................✻
செடியிடை வந்து புகுத நல்கிச்..........................✻
செய்ய சிவப்பிர காச னிந்தப்..........................✻
படிமிசை வந்த பரிசு பாடிப்..........................✻
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்..........................(௨)

பெண்பை யுதிரச் சிறையிற் புக்குப்..........................✻
பெருந்துய ரெய்திப் பிறந்துண் டாகும்..........................✻

புண்மையை நானென்று போற்றி மாய்ந்து.........※
புழுவார் நரகிற் புகுது வேனை.........※
யொண்மை யரவணை யோனுங் காணா.........※
வொண்மலர்ப் பாதங்கள் சூட்டி யாண்ட.........※
பண்பை நினைந்துகண் ணீர்த தும்பிப்.........※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.........(௩)

அந்தர வானத் தவருங் காணா.........※
வந்த வொளியி லசைவொன் றின்றிச்.........※
சுந்தர வேடம் புனைந்த ருளிச்.........※
சுகபானந் தனென் றுயரந் தீரச்.........※
சிந்துரச் சேவடி சென்னி சூட்டிச்.........※
செய்ய திருவாய் மலர்ந்த போதே.........※
பந்தனை தீர்ந்த பரிசு பாடிப்.........※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.........(௪)

வேதமு மாகம கீதை களு.........※
மிருதி புராணமும் வேத மார்க்கர்.........※
வாதமும் வல்லவ ருள்ளத் துள்ளு.........※
மூன்னியுந் தோன்றாத வள்ளல் வந்து.........※
பூதமும் பவுதிகந் தானு மற்றும்.........※
போதமே யாகிப் புரிந்து தோன்றிப்.........※
பாத மளித்த பரிசு பாடிப்.........※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.........(௫)

ஓரவுஞ் சொல்லவு மொண்ணா தென்ன.........※
வுபநிட முள்ளத்திற் றூனு மன்பு.........※
கூரவுங் கூறு மிறைவன் வந்து.........※
கொடுவினை யேனையாட் கொண்டா னென்று.........※
வாரவ ளிங்கிவ னானொன் றேறு.........※
யங்கையோ டங்கை யடித்து நக்குப்.........※
பாரவ ரேசும் பரிசு பாடிப்.........※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.........(௬)

இருகா லொருகாலுஞ் செவ்வி தாகாச்.........※
சித்தந் திரித்த திறக்கை யுன்னி.........※

யுருகா வருவி சொரியக் கண்க.......... ✻
ளுயரா விழியா வொழியா வென்று.......... ✻
மருகா பெருகா வழியா வாதா.......... ✻
வணுகா வகலா வயரா வுன்றாய்.......... ✻
பருகா வமிர்தினைப் பாடிப் பாடிப்.......... ✻
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.......... (எ)

ஏதாதி யேதந்த மென்று தேடு.......... ✻
மிமையவ ரோமாந்து நிற்க விண்ணம்.......... ✻
வேதாதி நூலால் விளம்ப வொண்ணா.......... ✻
மெய்ப்பொருண் மானிட வேடஞ் சாத்திப்.......... ✻
பேதாதி பேத மிலாத தன்னைப்.......... ✻
பெறவருள்செய்த பெருந்தகையைப்.......... ✻
பாதாதி கேசம் பரவி நின்று.......... ✻
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.......... (அ)

அந்தமு மாதியு மில்லா வொன்றென்.......... ✻
றீரண மோது மதுவே யன்றிச்.......... ✻
சந்தமி தென்னவொண் ணாதே யென்றுந்.......... ✻
தம்பிரா னென்வனாதிதா னாக்கி யென்றேற்.......... ✻
செந்தமிழ் மாலை புனைந்து கொண்டே.......... ✻
செய்ய சுரூபன் றிருவருளாற்.......... ✻
யந்தமும் வீடுமில் லாமை பாடிப்.......... ✻
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.......... (௯)

சாத்திரங் கற்ற சதுர ரெல்லாந்.......... ✻
தத்துவ மொன்று பலவ தென்று.......... ✻
காத்திர மாகக் கழிந்து போகக்.......... ✻
கருணைக் கடல்கண்ணிற் காண வந்து.......... ✻
நாத்திரங் கத்தன் புகழே பாடி.......... ✻
நற்றிரண்டு செய்திட நாயே னையும்.......... ✻
பார்த்தருள் செய்த பரிசு பாடிப்.......... ✻
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.......... (௰)

தேகாதி யாகி யழியு மென்னைச்.......... ✻
செய்ய கருணையாற் சீசீ யிங்ஙு.......... ✻

ளுகாது காணென் றருளிச் செய்தே.................✻
யைம்புலத் தாணைம் பொறியைய நோக்கிப்.................✻
போகாத வண்ணம் புரிந்து நோக்கிப்.................✻
போதப் பெருங்கண் பொருந்தத் தந்தப்.................✻
பாகார் மொழியிணைப் பாடிப் பாடிப்.................✻
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்... .........௬௧, அடி௱௩௩.

பந்துமுற்றிற்று.

---

௪௩-வது

## பாங்கிக்குரைத்தல்.

---

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை

சொல்லெல்லா நாத மென்னவும் பெற்றோஞ்.............✻
சும்மா விருக்கை தொழிலாகப் பெற்றோ.................✻
நல்லவ னன்பரு ளுஞ்சேரப் பெற்றோ.................✻
நாயனார் தாந்தந்த வாழ்விது பெண்ணே.................(௧)

படுக்கை பழந்தரை யாகவும் பெற்றோம்.................✻
பாணியிப் லேபலி கொள்ளவும் பெற்றோ.................✻
முடுக்கையுங் கோவண மாகவும் பெற்றோ.................✻
மொன்றுங் குறைநமக் கில்லைகாண் பெண்ணே.........(௨)

எல்லாரு நம்மை யிகழ்ந்திடப் பெற்றோ.................✻
மிம்மை மறுமையச் சங்கெடப் பெற்றோ.................✻
நல்லான் மலரடி நாஞ்சூடப் பெற்றோ.................✻
நாயனார் தாந்தந்த வாழ்விது பெண்ணே.................(௩)

வேண்டாமை யென்னும் விழுச்செல்வம் பெற்றோம்.......✻
வேண்ட லெனும்பிணி வேரறப் பெற்றோ.................✻
மாண்டவ னென்றருண் மன்பிணைப் பெற்றோ.................✻
மையோ விதென்ன தவஞ்சொல்லாய் பெண்ணே......(௪)

எய்ப்பற்ற சிறை யுடுக்கவும் பெற்றோ.................✻
மெங்கணு முள்ளான வாமெனப் பெற்றோம்.................✻

பொய்ப்பத்தி மெய்ப்பத்தி யாகவும் பெற்றேம்............※
புண்ணிய னூர்தந்த வாழ்விது பெண்ணே ... ரு, ஆ௨ ௱௮.

பாங்கிக்குறைத்தல் முற்றிற்று.

---

ரு - வ் து.

# ஸ்வரூபானந்தஸ்வாமிகள் வியந்துரை.

அடி நான்காய்த் தனிமிலொத்து வந்த
இரட்டைக்குறள்வெண் செந்துறை.

யாழ்த்த பிறப்பற்றுப் பார்ப்பா னும்போய்ப்..............※
பாராப்பற் றற்றபா தத்தைப் பார்த்து .......................※
வாழ்த்தவா ரீர்பெண்காள் வாழ்த்த வாரீர்......................※
வளமாஞ் சுரூபனை வாழ்த்த வாரீர்.......................... (க)

தோற்றமெ லாந்தாமே யாகும் வண்ணஞ்......................※
சொன்ன விரகினைச் சொல்லிச் சொல்லிப்....... ..............※
போற்றவா ரீர்பெண்காள் போற்ற வாரீர்.......... .........※
பொருவில் சுரூபனைப் போற்ற வாரீர்........ ..............(உ)

ஊற்றமெல் லாமுடைந் துக்கு நைந்திங் ....... ............※
குறைமாண்ட பேரின்பத் துய்த்த வெள்ளஞ்.....................※
சாற்றவா ரீர்பெண்காள் சாற்ற வாரீர்..........................※
தற்சுரு பன்பொற்றுள் சாற்ற வாரீர் .......................(௩)

ஓர்க்கொணு வின்பமோர் மாத்தி ரைக்கு............ ...........※
ளொளிர்வித்த வல்லப முன்னி யுன்னி..........................※
யார்க்கவா ரீர்பெண்கா ளார்க்க வாரீ..... ................ ....... ※
ரழகார் சுரூபனென் றார்க்க வாரீர்.... ........ .ச, ஆ௨ ௱௯௨.

---

வியந்துரை முற்றிற்று.





கணபதி துணை.

## ௩௬-வது, சுதந்தரன்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஏழை யேற்கெளி வந்த சுதந்தர...... ........................... ※
னென்னை ரெண்ணிலெட் டாத சுதந்தரன்........... ..... ※
வாழ நாமுமெல் லாமடி யாருடன்........................ ※
மனித னாய்வர வல்ல சுதந்தரன் ...........................(௧)

கருது தற்குமெட் டாதவ னைப்புலன்...................... ....※
காண வேவர வல்ல சுதந்தர.. ................... .....................※
னெருது வட்டமிட் டேகழி யாவனை...................... .....※
யென்வனை யாட்கொள வல்ல சுதந்தரன்..... ...............(௨)

மூவ ரோடுமுப் பத்துமுக் கோடிமா............ ........... ※
முனிவ ருக்குமெட் டாத சுதந்தரன்... ...................... ※
பாவி யேனை வாகிவந் தென்னையும்..........................※
பார்வை தானறப் பார்த்த சுதந்தரன்..... .................(௩)

சதுரி ழந்தழு மன்பர்த மன்புளே........ ..................... ※
தானி ருந்தழ காருஞ் சுதந்தர..........................................※
னதிரு தன்கழல் சென்னிவைத் தென்னையு. .................※
மன்ப ரோடுவந் தாண்ட சுதந்தரன்..........௪, ஆ௨_ரூா ௰௬

சுதந்தரன் முற்றிற்று.

## ௩௭-வது, தெய்வம்,

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பந்தமறப் பார்த்தருளிப் பாதமலர் சூட்டிப்...................※
பார்ப்பதறத் திரித்தருளிப் பாரொன்று நேரோ. ..............※
சிந்தையுள்ளே காட்டித்தந்த தெய்வங் கிடைர்தெய்வஞ் . ※
சிஞ்சி லப்புப்போற்றுந்தெய்வந் தெய்வமன்று கிடிகோள்.

நடுக்கமிகு முடம்புதனை நடத்திக்கொடு திரிந்து...........✻
நாசம்வந்த போதாக நானென்செய்வே னென்னுந்.......✻
திடுக்கங்கெடப் பண்ணியிடுந் தெய்வங்கிடீர் தெய்வஞ்.....✻
சிஞ்சிலுப்புப்போற்றுந்தெய்வந் தெய்வமன்றுகிடிகோளீ
தெய்வமுற்றிற்று. உ,ஆ௨௫ாம௮,

சூ௮ வது

ஸ்வரூபானந்தஸ்வாமிகள்.

## சிவப்பிரகாசஸ்வாமிகள்

இறைவல்லபம்.

அடி நான்காய்த் தம்மிலொத்துவந்த

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பந்தவனை யெல்லா மொருங்கும் படிசெய்ய.................✻
பங்கயக் கண்வைக்கவும்.............................................✻
பார்த்த பார்வையே பார்க்கும் படிசெய்ய .... .... .... ....✻
பாத மலர்வைக்கவுஞ்.................................... ....... ✻
சிந்தை யழித்துச் சிவமாக்கி யிங்ஙனே......................✻
தித்திக்கு மாவைக்கவுஞ்... .............................................✻
செய்ய சுரூபனூர்க் கல்லது வேறொரு........... .............✻
தேவராற் செய்யலாமோ.......... ..................................(க)

அழிவின்றி யென்று மொருதன் மையினின்......... .......✻
றருண்மேனி கொண்டிடவு..................................................✻
மண்டரும் பண்டை யருமறை யுந்தேட......................... ✻
வாயா வெணையாஎவு.... ............... .............................✻
மொழியு மனமுங் கடந்த தமையென்கண்...................✻
முன்னே நிகழ்ந்திடவு.......................... ......................... ....✻
முற்று மொழியாச் சுரூபனூர்க் கல்லது..................... .....✻
மூவராற் செய்யலாமோ ............. ... ......... ...................(உ)

காணும் பொருள்களுங் கண்ணுகக் காணும்........... ........✻
படிகடைக் கண்வைக்கவுங்..............................................✻
காட்சியு மாட்சியு மற்ற தமையிங்ஙன்....... ..................✻
காணக் கழல்வைக்கவும்.... ..................................................✻

பேணு மடியா ருரத்தைக் கரத்திங்ஙன்...... ...... ..⁕
பிச்சாடத் தான்வைத்கவும் ...... ......... ...... ... .......⁕
பேரின்ப நாதனுர்க் கன்றிமா லீசன்..... ..... ..... ......⁕
பிரமனுற் செய்யலாமோ.................. ................. (௩)

கள்ளப் புலனுங் கரணங்க ளைன்குங்.... ......................⁕
கருத்தழிந் தோடிடவுங் .................... .....................⁕
கருத்தழிந் தோடித் திரிந்திட் டவையெலாந்.... ......... ..⁕
கண்ணேகன் னாக்கிடவும்..... .......... ... .................. .....⁕
தெள்ளத் தெளிந்து செயலுஞ் சிவமாகச்.......................⁕
செய்யாமை செய்திடவுஞ் ................ ..... ..................⁕
சிவப்பிர காசனுர்க் கல்லது வேறெருு...... ............... ...⁕
தேவரா ற் செய்யலாமோ............. ..........௪, ஆ௫௨௨.

இறைவல்லப முற்றிற்று.

---

௬௬ - வது, பவகதி.

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

சந்தமொன் றின்றி யிருக்க வேண்டுந்.........................⁕
தானே யழகிய னாக வேண்டு................ .... .........⁕
மிந்த வுடம்பிலே காண வேண்டு.................................⁕
மெங்குந்தா னகி யிருக்க வேண்டும்................ ......... (௧)

காட்சியொன் றின்றி யிருக்க வேண்டுங்...... ............ .... ⁕
கரத்தின் மணிபோலக் காண வேண்டு..........................⁕
மீட்சி செல்வற் றிருக்க வேண்டும்..... ........................⁕
விடாதே பற்றுதே யிருக்கவேண்டும்................ ..........(௨)

உள்ளதெ லாந்தானே யாக வேண்டு.................. ........⁕
மொன்று மின்றிற்கே யிருக்க வேண்டுந்... ................ ⁕
தன்னிலும் வின்னா திருக்க வேண்டுந்................ ..... ..⁕
தழுவின ரோதான் றழுவ வேண்டும்........................(௩)

வித்தின்றி யேநாறு செய்ய வேண்டும்.......... ........ .....⁕
விளையாதே யெல்லாம் விளைக்க வேண்டுஞ்.......................⁕

செத்தின்றி யெசெத்திருக்க வேண்டுஞ் ...................... ※
செயலுஞ்செய் யாமையுந் தீர வேண்டும் .................... (௪)

அழியாத தாகாத தாக வேண்டு ................................... ※
மன்னிய மாகியொன் றாக வேண்டும் ............................. ※
விழியா திமையா திருக்க வேண்டு ................................ ※
மெய்யும்பொய் யும்மற் றிருக்க வேண்டும் ....................... (௫)

அல்லும் பகலு மொழிய வேண்டு ..................................... ※
மறிவறி யாமை யொழிய வேண்டுஞ் ................................ ※
சொல்லும் பொருளு மொழிய வேண்டுந் ............................ ※
※ தூரிய தாயன்னி தாக வேண்டும் ................................... (௬)

உள்ளும் புறம்பு மொழிய வேண்டு ................................. ※
முறங்கி யுறங்கா திருக்க வேண்டும் ................................ ※
வெள்ள வெளியா யிருக்க வேண்டும் ................................ ※
விளங்க வெளிதா யிருக்க வேண்டும் ........... எ, அடு-உய.

பவகதிமுற்றிற்று.

எல - வது, வாழ்க்கைப்பாடு.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

தன்னிலே யெல்லா மிருக்கு மாகிற் ............................... ※
றினெல்லாத் தன்னு மிருப்ப னாகிற் ............................... ※
பின்னிலன் முன்னில னவ னாகிற் ................................... ※
பெரிது முடிந்ததென் வாழ்க்கைப் பாடே ......................... (௧)

குணக்குன்று தானு மிருப்ப னாகிற் ............................... ※
குணமிலி தானு மிருப்ப னாகி ...................................... ※
வினைக்கொன்று மின்றி யிருப்ப னாகி ............................. ※
வின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே ........................ (௨)

அண்ட மணுவாய்ப் பெரிய னாகி ..................................... ※
லணுவண்ட மாகச் சிறிய னாகிற் ..................................... ※
கொண்டார்கள் கொண்ட வடிவ னாகிற் ............................. ※
கூடி முடிந்ததென் வாழ்க்கைப் பாடே .............................. (௩)

* ஆரியது தாத்தது – தேசிகம்.

நல்லதுந் தீயது மல்ல னாகி.............................*
னானுந்தா னாகி யிருப்ப னாகி.............................*
வில்லது முள்ளது மல்ல னாகி.............................*
வின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே..................(௪)

ஒளியா யிருளா யிருப்ப னாகி.............................*
உருவா யருவா யிருப்ப னாகித்.............................*
கனியாக் கனியா யிருப்ப னாகிற்.............................*
கடிதின் முடிந்ததென் வாழ்க்கைப் பாடே..................(௫)

ஓரா யிரம்பே ருடைய னாகி.............................*
ஒன்மைக் கொருபேரு மில்லை யாகித்.............................*
வாராதே நம்பால் வருவ னாகில்.............................*
வந்து முடிந்ததென் வாழ்க்கைப் பாடே..................(௬)

இருக்கச்செய் தேயெங்கும் போவ னாகி.............................*
விருமையூப் பின்றி யிருப்ப னாகி.............................*
லருக்கற்குந் தாளெளி யாவ னாகி.............................*
லன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே..................(௭)

சொல்லாதே சொல்லி யிருப்ப னாகிச்.............................*
சுகசுகு பன்னா யிருப்ப னாகி.............................*
லெல்லாமா யல்லா திருப்ப னாகி.............................*
வின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே..................(௮)

கண்ணின்றி யாவையுங் காண்ப னாகிக்.............................*
கையின்றி யேகைப் பிடிப்ப னாகி.............................*
லண்ணிய னையதி தார னாகி.............................*
லன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே..................(௯)

வித்தின்றி யேநாறு செய்வ னாகி.............................*
விளையாதே போகம் விளைப்ப னாகிச்.............................*
சத்திய மும்பொய்யு மல்ல னாகிச்.............................*
சால முடிந்ததென் வாழ்க்கைப் பாடே..................(௰)

எக்காலு மென்றுங் கெடாத வன்னே.............................*
யெப்பொரு னாந்தந்த வப்பொ ருளே.............................*
*துக்காய்ப் புகுந்துநின் றூட வேண்டுந்.............................*
தோந்தசி யென்றுநின் றூட வேண்டும் ...... ௰௧, அடி ௪௰௪.

(*துக்கம்) வாழ்க்கைப்பாடுமுற்றிற்று.



உ

கணபதி துணை.

## ஏக-வஸ்து, சந்நியாசம்.

### எண்சீர்க்கழிநெடி-லடி-ஆசிரியவிருத்தம்.

செந்தழி லுந்தண்டு நீர்தரித்துச் - சிகைநூ றெரித்துஞ்
செபங்கள்பண்ணி, முந்தி நீர் நீரினிற்காக்கைபோல - முழுகித்
திரியும்பிடார நீரோ, பெந்தகாயமலை நீரின்முழ்கிப் - பிரவா
யகாலஞ்செபித்தக்காலும், வந்துணர்வாயபிரமமாமோ - மதி
த்து நீர்பாரீர்பிடார* நீரே..... ........ ..............................(க)

காமியகன்மபாவம்பவத்தின்காரணமாமென்றுகட்டுரைத்து
மோமமுன்றுமபிசராசமாதி யுற்று நீர்செய்யும்பிடார நீரோ
யாமதொன்றில்லைமுன்புள்ளதன்றி யவரீருவிகற்கன்மமா
யுமக்கே, யேமமில்லாப்பவமெய்திடாதோ வெங்ஙனே சொல்
லீர்பிடார நீரோ.......................... ......... .......... ........(உ)

அன்னமயமாதிகோசமெல்லா - மகத்துளேயாகுதிசெ
ய்துதாய்தாய்ச், சொன்னமறையையுரைத்துநெய்யைத் - தழ
லிற்சொரியும்பிடார நீரோ, யன்னியமாயவியுநெருப்பி - லா
குதியாலவைபோயகல, மன்னியபோதப்பிரமமாமோ - மா
சறப்பாரீர்பிடார நீரோ .... ... ....... ............... ........ ......(௩)

குந்திமிதித்துக்குளங்கடூரக் - கொள்ளைமண்ணு வுடறூ
ய்மைசெய்து, சிந்துவெஞ்சேதுவெங்கங்கையாறுந் - தேடியே
யோடும்பிடார நீரோ, யிந்தவுடலாமலக்கடத்தை - யெத்தனை
தீர்த்தநீராட்டினு, மந்தமில்போதப்பிரமமாமோ வாய்ந்
துநீர்பாரீர்பிடார நீரோ ..........................................(௪)

ஏடுகொண்டுபாடையேறளவு - மிடையின்றியெல்லையி
ல்சாத்திரங்கள், பாடமதோதித்தலைபறியப் - பகருநற்கொது
ய்பிடார நீரோ, தேடுமுள்ளத்துக்குமோர்வரிய - சிற்சுத
மன்னகாரியமோ, பாடமதோதிப்பலிப்பதுண்டோ - பகுத்த
றப்பாரீர்பிடார நீரோ..... ....... ......... . .......... ................(௫)

---

* நீரேயென்பது - நீரோவெனவிகாரமாயிற்று. *பிடாரரீயம்பாட்டுவேஷகாரர்.

செந்துகிறண்டுதரித்தருளெனன் - செபித்து விரல்கண் மூடக்கருனேன், மூந்துநீர்சிந்தித்தன்மூற்கருனேன் - முன் டித்தலென்சடைகட்டருனெ, எந்தமொன்றில்லாவமலமாய வாதிப்பிரமமகமதனு, விந்தச்* சடஙகள் வேண்டுமோதக - னெங்ஙனேசொல்லீர்பிடாரநீரே.................. ௬, ஆடுசௌ.

சந்நியாசமுற்றிற்று.

---

எஉ-வது, தண்டு.

இஃது

ஸ்வரூபானந்தஸ்வாமிகளருளியது.

---

குறள்வெண்செந்துறை.

கோணுந்தண்டன்றெங்கடண்டுகுருகாட்டிற் காணாநதண்டு,
காணுந்தண்டன்றெங்கடண்டு - கண்ணூகியவேகதண்டே.....(௧)

மூன்றுதண்டன்றெங்கடண்டு - மூலமாநதண்டெங்கடண்டு. *
தோன்றுந்தண்டன்றெங்கடண்டுசுருதிமுடிசொன்னதண்டே

மடம்புகுதாதெங்கடண்டு - வைத்துவாங்காதெங்கடண்டு.....*
சடம்புகுதாதெங்கடண்டு - சச்சிதானந்தமாநதண்டே..... (௨)

மாத்தண்டலவெங்கடண்டு - மதியுள்ளவர்கொள்ளுந்தண்டு..*
வூரத்தண்டந்தாங்கியதண்டு - வுணர்வாகியவேகதண்டே.. ..(௩)

சமயத்தைதச்சாடியதண்டு - சகலமுந்தாங்கியதண்டு...........*
சுமையற்றிருக்கின்றதண்டுசுரூபானந்தனூர்ந்ததண்டே (௪)

தண்டுமுற்றிற்று. ௫, ஆடுடுக.

---

## எந- வது, தபோவனம்.

---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஆரணக்கிளி கொஞ்சு தபோவன..................................*
யாக மர்குயில் கூவு தபோவனம்.............................*
பூர ணத்தரி வாழு தபோவனம்.................................*
பொருவில் சித்தனை மாய தபோவனம்........................(௧)

---

* சடலை - வின்செயிகை.

சமயி கட்கதி தார தபோவனஞ் ………※
சமை தமைத்திரன் சார்வ தபோவனம் ………※
நமையு மிப்படி வைத்த தபோவன ………※
நாத னாரரு ளாய தபோவனம் ……… உ, ஆ டுருக.

தபோவனமுற்றிற்று.

---

## எசு - வது, ஊர்.

---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

உலக முழுது முதித்திட மெங்களூ ………※
ரொருதே வையு மற்றிட மெங்களூர் ………※
கலகா திலை யாகிய தெங்களூர் ………※
கரு ணாகர னாகழ லெங்களூர் ………(க)

இரந்தி யக்கள்வர் சேர்வில தெங்களூ ………※
ரின்ப நற்பயி லோங்கிய தெங்களூர் ………※
பந்த மற்றவர் பற்றிட மெங்களூர் ………※
பார்வை யற்ற பரம்பொரு ளெங்களூர் ………(உ)

விரகர்க் கதி தாரம தெங்களூர் ………※
விமலர் கட்கணி தாகிய தெங்களூர் ………※
துரி யத்தொளிர் சோதிய தெங்களூர் ………※
தூய்ய நற்கரு ணாக்கழ லெங்களூர் ………௩, ஆ டுருக.

---

ஊர்முற்றிற்று.





உ

கணபதி துணை.

எ௫-வது.

# இருபிறப்பாளர்.

இஃது

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

## ஸ்வரூபானந்தஸ்வாமிகளது.

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

ஒன்பதுவாசலுடையகுடிலையுருவென்றுகொண்டிடாதே ※
யின்பவறிவேவடிவானாரன்றோவிருபிறப்பாளராவார்.....(௧)
[ திடாதே

குப்பையாமிந்தக்குரம்பையைத்தாமென்றுகோலங்கள்செய்
யிப்பையைநீத்தறிவானவரன்றோவிருபிறப்பாளராவார் (௨

பொன்றுமுடம்பளவாகியிருப்பாரும்பூசுரராவார்களோ..※
வென்றுமுளவறிவானவரன்றோவிருபிறப்பாளராவார்..(௩)

பொல்லாவுடம்பளவாகியிருப்பாரும்பூசுரராவார்களோ.. ※
வெல்லாமுந்தாமாயிருப்பவரன்றோவிருபிறப்பாளராவார்௪

புழுவார்குரம்பைதாமாகியிருப்பாரும்பூசுரராவார்களோ. ※
வெழுவாயிறுவாயிலாதவரன்றோவிருபிறப்பாளராவார்(௫)

மூப்போடுநீரின்முழுகித்திரிந்தான்முனிவர்களாவார்களோ
விப்போதேமுத்தியடைந்தவரன்றோ விருபிறப்பாளராவார்

உளமதொருங்கவொருக்கியுபநிடத் துச்சத்தொருபொருளா
யிளமைமூப்பின்றியிருந்தவரன்றோ விருபிறப்பாளராவார்

பருக்குமெலியுமிப்பாழுடற்காகப்பரந்துதிரிந்திடாதே......※
இருக்கின்முடிமேலிருப்பவரன்றோவிருபிறப்பாளராவார்(அ)

மறப்புநினைப்புமிலாத்தன்றிவெவழிவாய்மறந்துமினி…… ※
யிறப்பும்பிறப்புமிலாதவரன்றேயிருபிறப்பாளராவார் (௯)

சிந்தைநோய்நீரச்சிவப்பிரகாசன்றிகழத்திருத்தவல்ல…… ※
வெந்தைசுரூபன்கழல்சூடிலன்றேயிருபிறப்பாளராவார் (௰)

இருபிறப்பாளர் முற்றிற்று. ஆ_டு௪௯.

## ௭௬ - வது, சிகை.

குறள்வெண்செந்துறை.

※வத்தாவொருகத்தியிலுலைவைக்கின்றமயிர்ச்சிகையன்று※
சித்தாயுலவெப்பொருளுக்குஞ் சிகையாவதுவேசிகைதானே,

சிலைக்கின்றமயிர்ச்சிகையன்று சிகையாவதுதித்துருவாகி.. ※
யுலைக்கின்றவெணப்பொருளுக்கு - முச்சத்தொளிர்வெற்றது
(தானே. (௨)

மரிக்கின்றவுடம்பிலெழுந்துமாள்கின்றமயிர்ச்சிகையன்று※
தரிக்குஞ்சிகையாவதுமெலாய்த்தனதும்பரிலாததுதானே (௩

சிக்குற்றெரியிற்சுறுநாறுஞ் சிகையன்றுசிகிச்சிகைபோலே
யொக்கத்தனில்வேறறவொன்று - யுச்சத்தொளிருஞ்சிகைதா
(னே (௪)

ம்பிரின் சிகைநன் சிகையன்று - மாயா மயமா கிளிர்ந்த※
வுயிருமுலகும்பரமும்போ யுச்சத்தொளிருஞ்சிகைதானே※

சிகைமுற்றிற்று. ஞ, ஆ_டுளக.

## ௭௭-வது, பூணூல்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

புரத்தாற் றிரித்தமெய்ப் பூணுநா லெங்கணூல்………… ※
போத முடையவர் போற்றுநா லெங்கணூல்……………… ※
கரத்தாற் றிரிக்கப் படாதநா லெங்கணூல்………………… ※
கருத்தைத் திரித்திறை காட்டுநா லெங்கணூல்………… (௧)

※வத்தா - நாவிதன்



உ

கணபதி துணை.

௯௰ - வது,

# சரூபானந்தசுவாமிகள்

## அடிமடக்குஸ்துதி.

எண்சீர்க்கழிநெடிலடியான்வந்தஆசிரியவிருத்தம்.

ஆதி வாமன மேவிய மெய்யனே ................ ❊
யகில லோகமு மாகிய மெய்யனே ................ ❊
பாச மோசன லோசன வீசனே ................ ❊
பழுதி லாமுழு தாகிய வீசனே ................ ❊
நேச மார்சரூ பானந்த நித்தனே ................ ❊
நின்க ழற்புக ழார்க ணநித்தனே ................ ❊
வாச கத்தொடு வாமனத் தாரனே ................ ❊
வள்ள லன்பர்கள் வாமனத் தாரனே ................ (க)

அன்பு நின்கம லக்கழற் குற்றதே ................ ❊
யளவி லற்பவ முற்றதைக் குற்றதே ................ ❊
துன்பன வெள்ளந் துடைத்தசொல் லொன்றுமே ................ ❊
தொண்ட ருட்சரூ பன்கழ லொன்றுமே ................ ❊
நின்ப தந்தொழு வாருத் தமர்களே ................ ❊
நிமல னன்ப ரெனக்குத் தமர்களே ................ ❊
யுன்பெ ருங்கரு ணைக்கள வில்லையே ................ ❊
யுபனி டத்துறை யிற்கள வில்லையே ................ (உ)

அருள தேவடி வாகி யிருத்தியே ................ ❊
யாறு ஞானிக டம்மு ளிருத்தியே ................ ❊
யிருளும் வன்பவ மாள விழித்தியே ................ ❊
யென்னை நின்னுரு வாக விழித்தியே ................ ❊
மருளு மும்மதின் மாளவு மெய்தியே ................ ❊
மாசு ளத்து மறைந்தது மெய்தியே ................ ❊
வருள தார்சரூ பானந்த வாரியே ................ ❊
வழுவி லேனுயி ருண்டதும் வாரியே ................ (௩)

நந்தி டாதசெந் தியனை யாவணையே.......❊
ஞான மாமத மேமொழி யாவணையே.......❊
வந்தி டாதுரு வாய்வரு வாவணையே.......❊
மன்னு தன்னிணைக் கொப்புயர் வானையே.......❊
சிந்தி டாவழி வேனையு மாளவே.......❊
சீறும் வன்பவம் வேரொடு மாளவே....❊
வந்த நற்சுரு பானந்த வள்ளலே....❊
மாசி லன்பிலற் குள்ளது வள்ளலே.......(௪)

மூடிவி லாவரு ளாலொரு மூர்த்தியே.......❊
முன்பு பின்பில தாகிய மூர்த்தியே.......❊
நெடிய வல்வினை வேரொடும் வெட்டுமே.......❊
நின்ம லன்றிரு மூர்த்தமவ் வெட்டுமே.......❊
படிய ராயினு ராபத் தனமதே.......❊
☞ யளவி லின்ப மருளுந் தனமதே.......❊
யொடிவி லின்பஞ் சுருபன் பதங்களே.......❊
யுற்று மீளிடு மற்றைப் பதங்களே.......(௫)

அல்ல வாதிக டங்கட் கரியனே.......❊
யளவி லந்தக் கரணக் கரியனே.......❊
பல்ல வாவினை பற்றறவை பங்கனே.......❊
பத்த னைப்பாட ஞகிய பங்கனே.......❊
நல்ல நான்மறை யீறல மாக்கவே.......❊
நாயி னேனுளந் தானல மாக்கவே.......❊
தொல்லை வன்பவஞ் சுட்டுணர் வொன்றுமே.......❊
சுருப ஞர்கழ லென்சிர மொன்றுமே.......(௬)

ஐம்பு லன்கர ணங்களுக் குத்தியே.......❊
யாதி மாயையை வேரொடு குத்தியே.......❊
யும்பர் வந்துணர் வாகி யுதித்தியே.......❊
யுள்ள நற்சுவை யாய்நின் றுதித்தியே.......❊
யய்ப ராதியைம் பூதல கண்டனே.......❊
யழிவி லாவறி வாகி யகண்டனே.......❊
செம்பொ னேசுரு பாவென நம்பியே.......❊
சேர வன்பரோ டாண்டது நம்பியே.......(௭)

☞ இவ்வடி - அனேகபுத்தகத்தின்று - ஓர்புத்தகத்திற் கண்டது.

காலதேசங் கடந்தவப் பாலனே ... ✻
கருணையாலுல கம்பரி பாலனே ... ✻
யோகவென்றன்ப ருக்குரு வாகியே ... ✻
யோகிவி னின்பளிக் குங்குரு வாகியே ... ✻
ஞானமுஞ்சிவ மாக்கும் விரகனே ... ✻
நன்கி லாருளத் தங்கும் விரகனே ... ✻
சீலமேசிறி யேனுரு வந்ததே ... ✻
சிற்சு ரூபனென் னுள்ளு ளுவந்ததே ... (௮)

பத்தி வன்கயிற் றார்ப்புண்ணு மாகியே ... ✻
பகரு லோக மலோகமு மாகியே ... ✻
முத்தி யன்பர் தமக்க்ரு ளானையே ... ✻
மூட ருக்குநன் கொன்றரு ளாணையே ... ✻
யத்தி யாநினை வாருளத் தர்க்கனே ... ✻
யன்றும் வாதிகட் காயகு தர்க்கனே ... ✻
யெத்தி நீபுகுந் தாள்வது மென்னையே ... ✻
யின்ப நற்சுரு பாவிது வெண்ணையே ... (௯)

கலையெ லாமறைந் திட்டது முன்ணையே ... ✻
காத்த ளித்துக் கரப்பதன் முன்னையே ... ✻
யலையெ லாமற வாறினர்க் கண்ணலா ... ✻
ஐயய முற்றவை வாதிகட் கண்ணலா ... ✻
யெவையி லாதெழு மீறிலின் பத்தனே ... ✻
யெண்ணயா ளுமெழிற்சுரு பத்தனே ... ✻
நிலையி னின்பளிக் குங்குரு வாகியே ... ✻
நீச னேனு ளமைந்திடு மாகியே ... ௰, அடி ௭௨.

அடிமடக்குஸ்துதி முற்றிற்று.



உ

கணபதி துணை.

௬௧-வது,

# சுரூபானந்தசுவாமிகள் வீட்டுநெறி.

நிலைமண்டில ஆசிரியப்பா.

அண்ட வுருவிற் பிண்ட முதிக்கும் ...... ※
ஆழியின் போதும் வாழி சிவமுயிர் ...... ※
இந்துதோற் றெடுக்கம் வந்தபல் லுயிர்கள் ...... ※
ஈரெழு புவனம் பாரெழு முயிர்நிலை ...... ※
உள்ளும் புறம்புங் கொள்கையொன் றறவிரு ...... ※
ஊமை தானே யாது மானது ...... ※
எழுத்தை யெழுது மெழுத்திலுண் டுறுபொருள் ...... ※
ஏக மாவது யோக மாகும் ...... ※
ஐய மின்றி யருளிறை யேசிவம் ...... ※
ஒருபொரு ளின்றிச் சுரூபனை வணங்கு ...... ※
ஓதல் வேண்டா தாத னிறைவு ...... ※
ஔவியம் பேசா ததுரோவ மாகும் ...... ※
அஃகம் பெற்ற துயிர்க்குயி ரதுவென் ...... ※
கருமை செம்மை வெண்மை யவனலன் ...... ※
ஙப்பொரு ளாவ தப்பொரு ளாகுஞ் ...... ※
சந்ததம் பாதுகை சிந்தையில் வணங்கு ...... ※
ஞத்தி யுடையவர் முத்தி பெறுவர்கள் ...... ※
அடவிய கடத்தைத் தடவிநிற் பதனில் ...... ※
அணக்கோ ணற்றுசிற் பிணக்கறு முத்தி ...... ※
தற்பதந் துவம்பத நிற்ப தசிபதம் ...... ※
நந்தி திருவடி சிந்திநா டோறும் ...... ※
பந்த மென்பது சிந்தி யாது ...... ※
மனன மரிக்கிற் சனன மரிக்கு ...... ※

※ ரோவம் - பாணம்.

மயக்கற விருந்து மயக்கந் தவிர்.......... ※
அரந்தை கெடுத்துப் பரந்தனை வணங்.......... ※
குலக்கந் தியானங் கலக்க மறுது.......... ※
வந்தனை யடங்கிற் சிந்தனை சிவமாம்.......... ※
அழகிய திருநடந் தொழுவ தசிந்தியம்.......... ※
இளம்பிறை சூடியே வளர்ந்தரு சுடரொளி.......... ※
தன்வனை யறிவது பின்ன மறுவது.......... ※
அனந்த வறமே மனந்தனை மரித்திரு.......... ※
கவலை நின்றிடுந் சிவனை நின்றிடுங்.......... ※
கால் மூன்றுநின் பாலுற வறிந்திரு.......... ※
கிரக வுதயந்தரு முடிவி லுயிர்நிலை.......... ※
கீழ்க்குல ஞான வாழ்க்கை யிலாதார்.......... ※
குருவொளி பிண்டந் தருமுயிர்க் குணர்வு.......... ※
கூத்தும் பலமு மேத்துவ தசிந்தியங்.......... ※
கெடுத்த சுழுனையி லெடுத்த துணர்வொளி.......... ※
கேட லுணர்வொளி யாடிய சிவமே.......... ※
கையது கூப்பி மெய்யுற வணங்கு.......... ※
கொண்ட நிலையது கொண்டி டா நிலை.......... ※
கோணு நிலையது காணு நிலையே.......... ※
கௌவை யறுவது செவ்வை யுறுபொருள்.......... ※
சத்தாதி யைந்ினு மொத்த தொருபொருள்.......... ※
சாதி குலம தோது சுத்திலஞ்.......... ※
சிந்தனை யடங்குதல் வந்தனை யாகுஞ்.......... ※
சீதள கமல பாதுகை பணிந்திரு.......... ※
சுருதியம் பொருளே பரிதியம் பொருளது.......... ※
சூழவே ழேழது வாழ்பயி ராகுஞ்.......... ※
செய்யுஞ் செயலவன் செய்யுஞ் செயலே.......... ※
சேட்டர்தா ளிணையை நாட்டி நீ வணங்கு.......... ※
சைவ நெறியே யுய்யு நெறியது.......... ※
சொர்க்க நரக முற்பவ விலங்கு.......... ※
சோம்புற வாசை யாம்பொழு தறுத்திரு.......... ※
ஞானபரை யந்த மோனஞ் சிவமே.......... ※
ஞெகிழிப் பொறிபோ னின்றது சிவையே.......... ※
ஞொள்கிய மனமுடை யோர்நுண் ணியரோ.......... ※
தகுதி யுற்றவர் பகுதி யற்றவர்.......... ※

தாக்கொன் றறவே நோக்கினை நோக்குத்.................... ❊
திடம்பர ஞானி யுடம்பு நற்சிவந்.................... ❊
தீர விருந்து பாரிரு சரணந்.................... ❊
துஞ்சல் விழித்தன் மிஞ்சல் விட்டிரு.................... ❊
தூங்கும் யோகம் பாங்கு பெறுது.................... ❊
தெள்ளி யறிந்து வள்ளலை வணங்கு.................... ❊
தேசிகன் சிவமென் றாசையொன் றறநில்.................... ❊
தைய வுருவது மைய வுருவே.................... ❊
தொந்தனை யறவே நந்தியற் சனைசெய்.................... ❊
தோற்றுஞ் சுடருள மேற்றிய தீபம்.................... ❊
நன்றிசெய் குருவை யென்றும் வணங்கு.................... ❊
நாட்டஞ் சொல்லும் வீட்டி னெறியை.................... ❊
நிருத்தஞ் செய்சிவன் குருத்தவ ராசன்.................... ❊
நீரும் பூவுஞ் சேருமன் பிதயம்.................... ❊
நுண்ணிய பொருளை நண்ணியற் சனைசெய்.................... ❊
நூலொடு குருவுரை வேலைசிற் றூறல்.................... ❊
நெட்டை யொன்றற விட்டு நீயிரு.................... ❊
நேயந் தன்னி லேயுஞ் சுடரொளி.................... ❊
நைந்துநைந் துருகிச் சுந்தர வடிதொழு.................... ❊
நொடிப்பொழு தாசை யறவடி பரவு.................... ❊
நோக்கற விருந்து சேக்கையை நோக்கு.................... ❊
நௌவி விழியுமை செவ்வி சிவனுரு.................... ❊
பசுபதி பாசம் விசுவமெய் யறிவு.................... ❊
பாசந் தவிர வீசனை வணங்கு.................... ❊
பிண்டந் தனிலு மண்ட முதிக்கும்.................... ❊
பீதம் பிரமை யோதுமை பரமன்.................... ❊
புண்ணியர் மண்ணி லெண்ணிய ஞானிகள்.................... ❊
பூண்டதா ளிணையை வேண்டி வணங்கு.................... ❊
பெருகும் பிறவி யருகி யின்புறும்.................... ❊
பேத மறவே நாதனை வணங்கு.................... ❊
பையர வணையனே பொய்யறு பரமன்.................... ❊
பொய்யு மெய்யுஞ் சையெனு மவத்தை.................... ❊
போக்கு வரவற வாக்கையி லுணர்ந்திரு.................... ❊
பௌவப் பிறவி செவ்விதை கருத்து.................... ❊
மனமெனுங் கடத்திற் றனமென வறிவு.................... ❊

மாண்ட வுடலுயிர் பூண்ட வுறுபொருண்..........................❊
மிக்கவித் தங்குர மொக்குநற் பொருளுயிர்..........................❊
மீண்டுமி முளையிற் காண்டதா முயிருடன்..........................❊
முந்துட லுயிரிற் பிந்த வுதிக்கு..........................❊
மூன்று காலமுந் தோன்றுமு ளிடத்தில்..........................❊
மெய்யு முடம்பு பொய்யு முடம்பு..........................❊
மேவைச் செய்யிற் காவைப் பயிரிடு..........................❊
மையல தறவே செய்பயிர் வளர்த்திரு..........................❊
மொட்டும் பூவுஞ் சிட்டனும் குருவு..........................❊
மோன முதிக்கின் ஞான முதிக்கும்..........................❊
மௌன வுண்மையே யெவனுரு மவன்சிவம்..........................❊
யானென தறிகி லானது முத்தி..........................❊
யூகித் துணர்வது யோகிற் கரியது..........................❊
யோகமீ தான மாகி யாறிநில்..........................❊
வடிவ திருந்த படியது வாகும்..........................❊
வாக்கியமெய்ப் பொருளை யாக்கிய துரைத்திரு..........................❊
விடாம லிருந்து கெடாது கெடு..........................❊
வீட்டின் பத்தைக் கூட்டுந் தேட்டறில்..........................❊
வெள்ளையுஞ் சிவப்பும் வள்ளல் பாதுகை..........................❊
வேண்டி யிருந்து வேண்டல்வேண் டாமை..........................❊
வைப்பது பாதுகை மெய்ப்பது மதுவே.....௧, ஆ௱எ௨௯

---

வீட்டுநெறி





உ

கணபதி துணை.

௬௨-வது

# சிவப்பிரகாச ஸ்வாமிகள்

# நமசிவாய.

## கலிவிருத்தம்.

சத்யாதி லக்ஷ ணபராத்ம பராமிர்தத்தைக் ................ *
கைத்தாரு மாம லைகதற் சமமாகவென்னை ................ *
யுய்த்தாரு முன்ற னடியாரொடு நானும்வாழ ................ *
வைத்தாயுன் வல்ல பங்கர்த்த நமசிவாய ................ (௧)

ஏற்றாரும் வேத சிரமோடம ரர்க்குமெட்டாச் ................ *
சீர்ப்பாத புண்ட ரிகநாயனை யேன்சிரத்தின் ................ *
மாற்றாது கோயில் கொளவைத்தெனை வாழவைத்தா ..... *
யாற்றேன் கோவிவ் வருளுக்கு நமசிவாய ................ (௨)

கற்றாரி லன்று கருதன்புடை யாரிலன்று ................ *
தூற்றா *ருக்ஷத்திற் சுகதுன்மதி நீசனேற்கு ................ *
வற்றா மகாவி பவமாகிய தன்னை நல்கி ................ *
நற்றாயி லன்பு மிகுநாத நமசிவாய ................ (௩)

இராகாதி சத்துருக் கென்பீடையி னாற்கலங்கிச் ................ *
சோகாதி துக்க மகவேதனை யிற்சுழன்று ................ *
போகாமே யஞ்ச லெனவந்தென துள்புகுந்த ................ *
பாகா ரருட்ப கருமாறெ ணமசிவாய ................ (௪)

ஓவா மகாகிரு பையினாலொரு மேனிசாத்தித் ................ *
தாவாத வன்பி றவிவன்கினை தன்னைவெட்டித் ................ *
தேவாய தன்வடி வென்வடி வாக்கியாண்ட ................ *
தாவாவி தென்ன வருள்வெள்ள நமசியாய ................ (௫

---

* ருக்ஷம் கோபம்.

ஒன்றாக் கலாதமெதா ருக்ஷித்திற வெனைப்பிடித்துக்.........※
கன்றாக் கிரங்கி வருகாதல்செய் தேனுவென்னத்.............※
தான்றாற்ற பேரரு ளால்வந்தெனை நல்கியாண்ட...... ...※
நன்றிக்கு நானேது செய்வேன்கொ ணமசிவாய........(௬)

பத்திப் பதத்தை யணுகாதொரு பர்க்கியகீனன்.............※
சுத்தச் சடந்தி கழுதுன்மதி நீசனேனை.......................※
முத்திப் பராமிர்த முழுந்திட வைத்தநின்க......... .........※
ணெத்தைச்செய் வேனேது செய்வேன்கொ ணமசிவாய.(௭)

மூடர்க் கெலாம்பி ரதமன்முக ரிதறுதீயன்.....................※
கூடற்கொர் மேரு குணகினன் கிருதக்நவேவை ...............※
யீடுற்ற வென்னை யிறையின்புற வாண்டதந்தோ...........※
நாடற்கொ ணாத கிருபைவெள்ள நமசிவாய..............(௮)

ஆசைப் பெருங்க டலைற்றுறு மந்தனேனை..... ..............※
மாசுற்ற வன்ப ரிடைவைத்தொரு மாத்திரா தன்னிற்......※
றேசுற்ற சிற்சு கபராமிர் தாக்கியாண்ட............... ......... ※
வீசற் கிருபைக்கேது செய்வேன்கொ ணமசிவாய........(௯)

உத்த சுருதிக்கு முணர்தற்கரி தாயவென்னை..... ...............※
யெத்திப் பிடித்தெ ளிதிலன்பி லெனக்களித்த...............※
சித்திப் பதந்தி கழுஞ்செய்ய சிவப்பிரகாச.......................※
வித்தற் கிருபைக்கேது கைமாறு நமசிவாய ௰. ஆ. ௭௯௯.

---

நமசிவாயமுற்றிற்று.





உ
கணபதி துணை.

௬௩ - வது,

# காப்புக்குறியுரைத்தல்.

## நேரிசைவெண்பா.

பல்லா யிரமறைக்கும் பார்ப்பரிய வானவர்க்குஞ் ......... ※
சொல்லான் மனத்தாற் றொடர்வரிதாய்ப் - பொல்லாத ※
நாயேனை யாண்டருள நாணாது வந்தருளுந் ......... ※
தாயே தமியேனைக் கா ......... (௧)

மாளாத வல்வினையை மாத்திரையின் மாற்றியெனை ...... ※
யாளாகு மன்பருட னுண்டருளி - நீளாக ......... ※
மென்னே யெனைக்காட்டி யாவையுமா யாசற்ற ......... ※
பொன்னே புவையேனைக் கா ......... (௨)

பார்த்திடத்தும் பாரா திருந்திடத்தும் பல்விகற்பந் ........ ※
தீர்த்திடத்துந் தீராச் சிறுகிடத்தும் - பார்த்துவரும் .... ※
வன்பேத மாளுவித்து மாளாத வின்பளித்த ......... ※
அன்பே யடியேனைக் கா ......... (௩)

அண்டாண்ட மற்றைப் பகிரண்டம் யாவையுமாய்ப் ...... ※
பிண்டகண்டப் பேதப் பிறிவதுவாய்க் - கண்டுநின்ற ....... ※
கண்ணு கமலக் கழலடியே னுக்களித்த ......... ※
வண்ணு வடியேனைக் கா ......... (௪)

உடம்போ டிருந்தே யுடம்பின்மை காணத் .... ......... ※
திடந்தா னெனக்களித்த தேவே - யடங்காத ......... ※
பேய்த்தேர்ச் சமயத்தார் பேரரவங் கேளாமை ......... ※
தீர்த்தாய் சிறியேனைக் கா ......... (௫)

## குறியுரைத்தல்.

ஒன்றுணரின் மெய்யே யுலகுணர வாமென்றங்
கொன்றுசொலி மன்றத்தி னுண்ணின்றே - குன்றவிலா
ஞானத்தாய் நல்ல நயனத்தாய் நால்வேத
கானத்தாய் நாயேனைக் கா (௬)

மாரீசப் பிணக்காம் வழக்கறக்க மன்றேறி
யார்க்கு மிறையறிவா யப்பொருளைப் - பார்த்துப்
பிணங்கா திருமினெனப் பேசிமழு வேந்து
மணங்கா வடியேனைக் கா (௭)

அஞ்ஞான வல்லசுர னங்கமரு மூட்புரத்தை
மெய்ஞ்ஞானத் தீயால் விழுங்குவித்துப் - பொய்ஞ்ஞானக்
கங்குல் கழித்தாய் கருதரிய பேருணர்வே
யெங்குமளித் தாயெனைநீ கா (௮)

பஞ்சவர்க்குச் சார்வதுவாய்ப் பற்றுத நூற்றுவரைத்
துஞ்சி யடத்துணித்துச் சொல்லிறந்த - வெஞ்சவிரா
ஞானத்தாய் நல்ல நடனத்தாய் நால்வேத
கானத்தாய் நாயேனைக் கா (௯)

மூலமே யென்றழைக்க முன்னின்றங் கோலெனுங்
கோலமே செய்ய குருபரனே - ஞாலமே
விண்ணே பிறவே விரிந்தொடுங்க நின்றருளாச்
கண்ணே கடையேனைக் கா (௰)

ஐவா யரவமெனு மைம்புலனு நாகணையே
மெய்யாக மேவி விழித்துறங்கு - மையா
வறியேனை யாவ ரறிவுரு வாய்வந்த
செறிவே சிறியேனைக் கா (௰௧)

நனவாதி நாடுந் துரியமே ழாகச்
சொனநான் முகப்படைத்துத் தோன்றி - யினமேது
மில்லானே பேதுக்கட் கெட்டா வெழிலுருவா
நல்லானே நாயேனைக் கா (௰௨)

ஞானமதத் தாற்றருக்கி நாநா வறச்சிறி...... ....... .....*
யீனமத மாயையினை யீடழித்து - நானதற ........ .......*
நின் றுணரும் வாரணமே நெக்குருகு மன்பருட...... ......*
ஞென் றவென்னைக் காத்திடு நீ யுற்று.. .... ..................(௰௩)

ஆறுமுக மெய்யே யமைந்தடைவார் தங்களுக்குக்....... *
கூறும்வணம் வந்த குணக்குன்றே - வேறுநிகழ்...........*
குன்றெறிந்தாய் குன்றவிலா வன்பருளங் கோயில்கொள
நன்றறிந்தாய் நாயேனைக் கா.............. ......................(௰௪)

மாது மருந்துண்ண வன்குழவி நோய்க்கதுபோ............*
ஞாத வசோகத்து நன்கமைந்து - போதத்...............  .....*
திருகா வெறுவிகற்பச் சித்தமய றீர்த்த........... .... .....*
வருகா வடியேனைக் கா.................................... ....(௰௫)

அவாவறுத்தல் சாந்திமுத லாய்ந்ததெளி வென்னு.........*
மூவாமதிபோன் முக்குடைநின் றோங்கத் - தவாமதிபோய்*
வீற்றிருந்தாய் வெம்பிறவி வேரோடும் வெந்துவிழ..... *
லூற்றிருந்தா யுற்றெனை நீ கா............ ......................(௰௬)

சொற்பயின்ற நற்கிளிபோற் சோராமை நூல்பலவுந்...*
தற்பயின்று *தர்க்கித் தவையுணரா - வற்பருக்குப்.......*
பேயே யளித்தருளிப் பேரின் பெனகதளித்த.......... ....... *
தாயே தமியேனைக் கா..........................................(௰௭)

நில்லாத வற்றை நிலையென் றுணராமை......... ..........*
யெல்லா மழியும்வண மெய்துவித்துப் - பொல்லாத......*
பித்தா முலகிற் பிணக்கறவொன் றுவுதித்த...................*
புத்தா புலையேனைக் கா.............................. ....(௰௮)

கலைவேடர் கட்டுங் கதத்துவலைக் கெட்டா.... .... ..........*
நிலைவேட நெஞ்சினுளே காட்டிப் - பலவேட........ .......*
மெல்லா மெழிலா ரடியராக் கண்டந்த................... .......*
செல்வா சிறியேனைக் கா........................................(௰௯)

* தர்க்கித்தென்பது - தர்க்கியெனவிகாரமாயிற்று.

அந்தமிலா வூழியெல்லா மாயொழிந்தே வந்ததெனப்...※
பந்தமெலாம் வீடப் பணித்தருளி - நந்தவிலாச்..........※
சோதி யெனக்குணரச் சொல்லாமற் சொல்லியவெம்'......※
மாதி யடியேனைக் கா.......................................(உ0)

அன்றமுத லாக வடுத்தபொரு ளேவடிவா ..................※
யொன்று மறியா துழல்வேனை - நின்ற........................※
படியே சிவமாகப் பார்த்தெனையாட் கொண்ட...............※
வடிவே யடியேனைக் கா.......................................(உக)

மடுவின் கரைமகவை வைத்ததாய் பார்வை.....................※
விடிலங் கதுவிழுமா போலக் - கெடுவே.......................※
னுடையாய் திருக்குறிப்ப தோவியிடின் யார்க்குங்.........※
கடையா மெனைக்கருதிக் கா.....................................(உஉ)

தன்மத்த ராகுந் தவத்துளோர் தாநிற்க.........................※
வன்மத் தனைத்தேடி வந்தாண்ட - வுன்மத்.....................※
துடையானே யொப்பொருவ ரில்லாதா யார்க்குங்..........※
கிடையானே கீழெனைக் கா.......................................(உ௩)

என்று மருளே யெனக்குடைமை யெம்பெருமாற் .........※
கென்று மருளே யியல்பானு - லென்றுமுரைத்.............※
தெண்ணுமை யென்கடனு மேதுசெய்துங் காத்தருளக்...※
கண்ணுளா வுன்றன் கடன்..............உச, ஆ பாடல் - எருஎ.

காப்புக்குறியுரைத்தல் முற்றிற்று.

---

## ௲ச-வது, அதிசயப்பார்வை.

குறள்வெண்செந்துறை.

அருவாகி யகண்டமு மாகி யானந்தமு மாகிய பிரமங்.....※
குருவாயருள்செய்தமைபாரீர்சோதின்றிநிறைந்தமைபாரீர்

விடியாவிருள்போயிடும்வண்ணம்வேதாந்தவிளக்கினையேற்
றுடியாநிதிகண்டமைபாரீர்முத்திக்கரைசானமைபாரீர்.உ(றி

செறிவாகியிருந்தவர்தாமேசிவன்சிவனென்னவிரண்டாய்ப்*
பிறியாவகைநின்றமைபாரீர்ப்பிறவிப்பகையற்றமைபாரீர். (௫

அறிவோடறியாமையிரண்டுமணுகாதணுகிச்சகமாகிப்.......*
பிறியாவகைநின்றமைபாரீர்ப்பிறியிற்றனிலாதமைபாரீர் (௬)

புரியாரரவானமைபோலே போதத்துலகங்களுதித்துத்......*
தெரியாவகைநின்றமைபாரீர் தெரியிற்றெளிவானமைபாரீர்

உலகமிரவாவதொழித்தெம் முணர்வேபகலாவதுணர்ந்து..*
கலகங்கடெளிந்தமைபாரீர் கருமங்கண்முடிந்தமைபாரீர்(௬)

கன்னக்களர்தம்மையும்விசுங் கண்வாய்முதலிந்திரியங்க.....*
ளென்னக்கவர்கின்றமைபாரீர்யானும்மதறிந்தமைபாரீர்(௭

ஊனுதியுளங்கடையாகவுணராமையினுவிளவாகி... ...........*
நானுகியிருந்தமைபாரீர்நானும்மதறிந்தமைபாரீர்........(௮)

ஒடுவாசல்களொன்பதுடைத்தா யூனுகிவகுத்தசிறைக்கே... *
முடியாதிடுவேதனைபாரீர் மூலத்தணுகாதமைபாரீர்.... ..(௯)

மங்கும்பிறவிக்கடன்மாயமதியென்னுமரக்கல்மேற ....... ....*
வெங்குங்கரையானமைபாரீரிமைப்பிற்பவமற்றமைபாரீர்(௰.

அல்லற்றுவரும்பகலற்று வயலற்றறிவேவடிவாகிச்.... ......*
சொல்லற்றுரைநின்றமைபாரீர்சுகமேவடிவானமைபாரீர். ௰௧
அதிசயப்பார்வை முற்றிற்று. ஆ௨எ௬அ

---

## ௯௫,வ௩,அவனேநான்.

## இ௩:சிவப்பிரகாசசுவாமிகளது.

கலிவிருத்தம்.

என்னேயிப் பிறவிக்கே யிடைந்திடைந் திடுவேவணப்......*
பொன்னேயொத் திலங்கும் பூமச்சோதி கழல்சூட்டா.....*
மின்னியொத் திடித்தாற்போல் விணையெல்லா மறுத்தபி
ணன்னேயற் புதங்கேளா யவனேநா னேனே.......... (௧)

அலைவாயில் வடுப்போலே யலைந்தலைந் தொருக்காலு...※
நிலையாத பிறவியை நிலைசெய்த படிகேளாய்...※
தலையாரப் பெருஞ்சோதி தானிவணை தரித்தபி...※
னலையாதங் கழிவில்லா வவனேநா னானேனே...(௨)

ஆடிதை யமாவாசி யலைகட லாடியுந்...※
தேடியு மோடியுந் திரிந்தேதுங் கண்டிலேன்...※
கூடிய வந்நாளிற் குரைகழ றரித்தபி...※
னாடியே தேடி யவனேநா னானேனே...(௩)

பாஞ்ச பவுதிகமாம் பரிணாம வுபாதிக்கே...※
மாஞ்சேது மறியாதே மயல்கொண்டு திரிந்தெங்கு...※
மோஞ்சேனைப் பெருஞ்சோதி யுணர்வேயென் றுணர்த்திட※
வாஞ்சேயா னந்தமா மவனேநா னானேனே...(௪)

கற்பனை தவமென்று கலைவீசு மாந்தர்த...※
முற்பனக் குழியிலே யுழைத்துணர் விலியேனை...※
நிற்பன திரிவன நீயேகா ணெனச்சொன்ன...※
வற்புதங் கண்டபி னவனேநா னானேனே...(௫)

தோன்றிய வுடலுக்குந் தாரகமா மனத்துக்குஞ்...※
சான்றாகிச் சலியாதே நின்றதற் சுரூபத்தை...※
யூன்றவென் மனத்திடை யுத்தம னுரைத்தபின்...※
னன்றேசஞ் சலமின்றி யவனேநா னானேனே...(௬)

செறிவான வடிவினைச் ஸ்ரீபுரு ஷோத்தம...※
னெறியான மறைபாலே நேதிநேதி யென்றுபின்...※
பிறியாத பேரின்பப் பிரமமே நீயென்றென்...※
னறியாமை தவிர்த்தபி னவனேநா னானேனே...(௭)

பண்டைநான் முகனாரும் பரந்தநல் லுலகமுங்...※
கண்டவை நரகென்று கழித்தவாக் கருள்செய்தான்...※
விண்டலர் பொழில்சூழும் விளையந் தணைய்வந்...※
தண்டமுநீ யென்ன வவனேநா னானேனே...(௮)

ஓராமை யேமூல் மூலகுக்கென் றுணராதே.................※
பேராசை யுள்புக்குப் பிரமித்துத் திரிவேனை..................※
வாராயென் றருள்செய்து மறைசொன்ன பிரமமு.........※
மாராயி னீயென்ன வவனேநா னேனே......................(௬)

அடியொடு முடிவிலா யாராயி னிலையாகுங்...................※
குடியொடு பதிகுலங் கோத்திர சூத்திரச்.........................※
செடியினை யறுத்திட்ட ஸ்ரீபுரு ஷோத்தம.....................※
னடியிணை சேர்ந்தபின் னவனேநா னேனே...........(௭)

போதுக்கு மொளியான பூமகற் சோதிதன் ......................※
பாதத்தே பணிமாறத் தொடுத்தசொற் றொடைபத்துங்※
கோதற்ற மனத்தார்கள் குருபர னருளாலே........................※
வாதற்ற பிரமமே வடிவாகி யிருப்பாரோ.... ௭௧, ஆ ௭௭௬.

அவனேநான் முற்றிற்று.

௬௭௬ - வது

# அவித்தியாப்பிரலாபம்.

எண்சீர்க்கழிநெடிலடியால்வந்த - ஆசிரியவிருத்தம்.

அறிவென்றோ ராண்மகனு ரவளையறி யாதே...................※
யவிச்சையெனும் பேதையேனு மவர்க்குமுன்னம்புகுந்தே ※
நெறிநின்று நெடுநாளெல்லா மென்னோடே நல்கி,..........※
நேயமெனும் விலக்குமுமாய் நின்றதற்குப் பின்பு..........※
பொறியைந்தும் புலனைந்தும் பூமிமுத லைந்தும்...........※
புந்திமன மாதிநாலும் புரியும்வாயு வைந்து..................※
மெறிகின்ற விருபத்து நால்வரையும்பெற்றே.................※
னென்னைவிடாவிலையாளோடேபோனர்காணுமாண்டே.(௧)

பொய்யான வுறவாலே புத்திரரு முண்டாய்ப்.....................※
பூமிதனி லென்னைப் புறப்படவே புகுந்தேன்...............※
மெய்யான வுறவாலே மிக்கவனை விரும்பி......................※
வீடுகெட்டு விளைவுகெட்டு வேற்றுடம்பே யானேர்..........※

சையோவிவ் வார்த்தைதனைச் சாற்றலாவ தொன்றோ.....✻
தம்பாவ மனைத்தினையுந் தவிர்விட்ட தன்மை...............✻
யையோவிவ் வாண்மகனு ரவனைவிடா ராண்டே...............✻
யவிச்சைகுல நசித்தாலன்றி யவனைவிடா ராண்டே.....(௨)

என்னைமணம் புணர்ந்தநாளே யிரட்டைவனை யிட்டா... ✻
னேகனு யிருந்தவனே யனேகனுமிங் கானு............ ✻
னன்னைசொல்லை மறுப்பானோ ராங்காரன் பிறந்தா... ...✻
னந்தரமே யவர்க்குநல்ல வாசையையும் பெற்றேன்........✻
பின்வனைவிச்சை புகுந்ததற்பின் பேர்த்திடவுந் தவிர்ந்தான்
பேதையேனு மிவர்க்குச்செய்த பிழைகண்டிலேனிதன்மூன்
மூன்னமிவ னெனக்குச்சால நல்லரிகிட ராண்டே.... ....... ✻
மூகமாய மிடுவதன்மு னல்லரிகிட ராண்டே. ...............(௩)

சாந்தியொடு தாந்தியெனும் பாங்கியர்கள் சூழத்...... ......✻
தற்பரமா மறிவினொடே சமாதியிலே புகுந்தான்...........✻
பேர்ந்திடுதல் பறைந்திடுதல் பிரிந்தொருகாற் பாரான்..✻
பிச்சியெனப் பிதற்றவிட்டுப் பேசாதே யிருப்பன்....... ✻
றேந்திரியே யமையாதோ செகத்தினுள்ளீ ரெனக்குச்.....✻
சிலவரொடே யோரஞ்செய்து சீவிப்பதிற் காட்டி . .....✻
லோர்ந்திடுவிங் குனாக்கலாவ தொன்றுமில்லை யாண்டே✻
யோமென்னும் பெருந்தீயில் வீழ்வதல்லா லாண்டே....(௪)

அருவாகி யிருந்தவருக் கென்னொடுடை யடைவா......... ..✻
வகிலமெல்லாம் படைத்தளிக்கு மாண்மைதனைக்கொடுத்தே
னொருவராலு முடியாத வுதவிதனைச் செய்தே .............✻
னொருநாளென் குடிலகத்தி னடந்தாலோடிப் போவ.... ..✻
திருவர்புக்கார்க் கிதற்குமுன்னை யிவைகண்டது மில்லை.....✻
யென்றுடைய பொறையினாலே யிதுநாளிங்ங னடந்தேன்
புருடரிவ ராகையாலே பொறுத்தேன்காணு மாண்டே ..✻
பூண்முலையாரிவைகள்செயப்பொறுப்பரோதானாண்டே (௫)

எங்குமெங்கு மிவர்க்குநல்ல வின்னமிர்தா யிருப்பே.....,✻
னிகலோக பரலோக மென்னிதல்லா லில்லை...................✻
யங்கங்கே வற்றையுண்டிட் டவளோடே யிருப்ப ...... ✻
ராண்மகனார் செய்யுங்குண மாற்றலாவ தொன்றோ..........✻

கொங்கைநல்லா ளிடுமருந்தாற் குணமிவியு மானான்....... ✻
கொச்சைசையேனு மிச்சித்தக்காற் கூடலாவ துண்டோ...... ✻
வங்கணமொன் குடிவ்வாயி லயர்த்தார்காணு மாண்டே..... ✻
யவர்க்கிவளையா வந்தரங்க மானுள்காணு மாண்டே...... (௬)

அத்தவலக்கு மித்தவலச்கு மோதிருக்கச் செய்தே.... ..... ✻
யாண்மகனுக் கொருதவசி யறிவுசொலப் புகுந்தா......... ✻
வித்தவலயி லுறவறுத்தா னிளையவளைக் கொண்டே.... ✻
யிதுவுமென்றன் விதிவசமோ வென்றிருந்தேன் சிலனு . ✻
வத்தவலயி லுறவினையு மப்படியே யறுத்த'.................... ✻
ளுண்டிசெய்த வழ்குதன்னை யார்க்குச்சொல்லு வேறன் ✻
றெருந்தறுத்துச் சோதிவடி வாக்குவாரோ பெண்ணே....... ✻
சோதிக்குளே நாமும்புகத் துணியமில்லை காணே.... .....(௭)

சாக்கியாகி யவரஙகன் சலியாதே யிருக்கச்.................... ✻
சகமனைத்துஞ் சந்நிதிக்கே சாய்ச்சுகொடே போந்தேன் ✻
பாக்கியமில் லாமையாலே பயல்கவளையும் பாரான்...... ✻
பசித்தாலும் பயிக்கம்பண்ணப்பார்த்துக்கொடேயிருப்பன்
வாக்கினுக்கு மனத்தினுக்கு மெட்டாத நிலத்தே.......... ✻
மறையவளைக் கொடுபுக்கே வைச்சுக்கொடே யிருப்ப... ✻
னுக்கினமோ யழிப்பாராநுந் றடுக்கலாமோ வாண்டே...... ✻
யடையக்குல நசிப்பதிங்ங னறிந்தோமே யாண்டே.... (௮)

அன்றிவன் வசத்திநெறு சத்துமல வாகி........................... ✻
யாண்மகனுர் வெறுத்தவன்றே யநிருபதி யானே............ ✻
னின்றெனக்குச் சனித்தனவு மிப்படியே யானு............... ✻
லேந்திழையீ றொன்சொலுவே னிந்தக்கேடு தனக்கு........ ✻
வொன்றிடினு னுலகுதனி லொருத்தியைப்போ லிருப்ப ✻
ளொருபாயங் காணேனு னுணர்வுபுக்க பின்னை................ ✻
யென்றுமினை யவளைப்பார்த் திடுவர்காணு மாண்டே..... ✻
யென்னைக்கடைக் கண்ணுலும் பாரார்காணு மாண்டே (௯)

அச்சட்டையா லன்னமேறி யகிலமாக வென்றிட்............ ✻
டன்புடைய குணத்தினுலே யகிலமெலாம் படைத்தா...... ✻
னுச்சட்டையாற் புள்ளையேறி யுலகமெலாங் காக்கு..... ✻
மொளியுடைய குணத்தினுலே யுவமையியி யானுன்......... ✻

## ௩௯௮ அவித்தியாப்பிரலாபம்.

மச்சட்டையா லெருத்தையேறி யுலகமெலா மாள ...... *
மாயக்குணந் தானான வள்ளலெனப் பாரா .... ...... *
னெச்சட்டையா லுணர்வுதோன்றி யுண்மையானு ராண்டே
யோமுமிட்டுத் துரியமாக வுணர்ந்தார்காணு மாண்டே(௰)
அவித்தியாப்பிரலாபமுற்றிற்று. ஆ-எ௮௯

---

## ௯ள-வது, *பாண்டியுரைவாரம்.

குறள்வெண்செந்துறை.

ஏற்றப் பாவணபோ லிவ்வுடலை .............. *
யென்று மென்று நீரிற் றேய்த்தக்காலும் ........ *
பேர்த்துப் பேர்த்துமிது வூத்தையன்றே .............. *
பேத மறுத்திட வற்றோ சொல்வீர் ..............(௧)

அல்ல வுடலைக் கழித்து ........ ...... ...... *
அறிவே வடிவென் றுணர்ந்திருப் பார்க்குச் ...... ..... *
சொல்லக் கடவதொன் றுண்டோ ...... ...... ...... *
சுருதிக ளேற்றி யளவிறந் தத்தை ........ ......(௨)

கானலை நீரொன் றுணர்ந்து ............ *
கரையுந் திரையு நுரையுங்கண் டாற்போற் ........ *
றூனல்லா வூனத்தா னுக்கிச் ...... ...... ...... *
சாத்திர கோத்திரஞ் சாற்றுகின் றூரோ ...... ......(௩)

புத்தி விகற்பத்தை விட்டுப் ........ ....... *
போதம் வடிவென் றுணர்ந்திருப் பார்க்கு ...... ...... *
வித்தவண கூத்தாடல் வேண்டுமோ ........ *
விரவி யுதித்தா லிருள்போ மிடத்து ............(௪)

பரிதி யொருவ னுதிக்கப் ........ ....... ........ *
பலகோடி யண்டங்கள் பேதமா னற்போற் ........ *
சுருதி முடிவி னுதிக்கச் ........ ....... ....... *
சொல்லும் பொருளுந் துலங்கிடுங் காணே .... ...... ..(௫)

---

* பாண்டியுரைவாரமென்பது - பாண்டித்தியவுரையாம்.

யாத்திர பேதத்தி ளூலே.......................................*
பலகோடி யிரவிகள் பேதமா ளுற்போ.......................*
னேத்திர மான பிரம..........................................*
நிகரிற் ப்ரபஞ்சமு மாயுதித் தானே.........................(௬)

மதியைக் குறிப்ப திலக்காய்.................................*
மாமரத் துச்சியைக் காட்டி ளுற்போற்.......................*
பதியைக் குறிப்ப திலக்காய்ப்.................................*
பஞ்சகோ சச்சட்டை சாத்தி ளூேரா............................(எ)

செகத்தெங்கு நிறைந்தவச் சிவளுர்தம்மைச்....................*
சிந்தையி லன்றித் தெளிவு ளுர்காண்............................*
முகத்தை முகத்தாலே காணலாமோ...............................*
முன்கையிற் கண்ணாடி தானெ ழிய................................(அ)

ஊனிலே யொன்பது வாசல்விட்டு.................................*
வொருவனைக் காவ லிருத்தி வைத்து..............................*
லூனி லொருவனும் போனவாறே.................................*
யொன்பது வாசலு நாய்புகுங் காணே..............................(௯)

ஓங்கு முடியைத் தலையில்வைக்க.................................*
வுலகமெல் லாமர சாளு மாப்போ..................................*
லோங்காரந் தலையறி வோடேகூட்ட................................*
வகிலமு நாமா யிருக்க லாமே....................................(௰)

நெஞ்சிலே கட்டை யடுக்கவிட்டு..................................*
நீட்டி நிமிர்ந்து கிடப்ப தன்முன்..................................*
னஞ்சையு முள்ளே யடக்கிக்கொண்டு..............................*
யானந்த மாயறி வாகவல் லீரோ....................................(௰௧)

அம்மையு மப்பனுங் கண்டிருக்க...................................*
வந்தக ளூருயிர் கொள்வதன் முன்ன...............................*
மும்மையு மூனையும் வேறதாக.....................................*
வுள்ளு பொழுதே யுணரவல் லீரோ...................................(௰௨)

மக்களுங் சுத்த மனைவிகத்த ※
மாய வுடலெரி கொள்வதன் முன்ன ※
நிஷ்கள மான வறிவுதன்னை ※
நும்வடி வாக நினையவல் லீரோ (௰௩)

திருவினைப் பாசங் கழுத்தினிலிட் ※
டேற விறங்க விழுப்பதன் முன்னங் ※
குருவினைச் சென்று பணிவீராகிற் ※
கோடி லறிவோடே கூட லாமே (௰௪)

போத வடிவை மறந்து ※
பூமிக்கே வந்து பிறந்த வாறே ※
தாரா தலமியென் றேசிச் ※
சங்கெதிர் நுத்தம் வடிவிழந் தாரோ (௰௫)

நன்மை மான வுணர்வயர்த்துத் ※
துயரில் வந்து பிறந்த வாறே ※
யென்மக னென் றெடுத்துக்கொள்ள ※
யானுன் மகனென் றிசைந்திருந் தாரோ (௰௬)

தனையு மிரண்டுள தன்டொன்றத்தைத் ※
தாமே யிவொருந் தாங்கு வாருங் ※
கனையும் படியறி யாமையாலே ※
காவித் திருந்தவா கண்டுகொள் ளீரோ (௰௭)

வானுறி பூதங்க டோற்றுகைக்கும் ※
வான்கருத் தும்புலன் றோற்று கைக்கு ※
மூனுறி பேதங்க டோற்றுகைக்கு ※
முண்மையு மாயுணர் வாயிருந் தானே (௰௮)

போது புலர்ந்து புகுந்தவனையும் ※
புத்தியை யெங்கேனும் போக விட்டுத் ※
தூதுவர் வந்து புகுந்தவாறே ※
துடைகள் பறக்கத் துடங்கி னாரோ (௰௯)

கொத்து முதலியொருவ னுள்ளனவன்.............................※
கொள்வது மில்லைக் கொடுப்பது மில்லைப்.... ..................※
பத்துக் கூலிபத்துச்சே வகருமவன்.................................※
பார்வையா லேபடை யாயி ஞரோ ........................(உ0)

கொல்லும் புலிபோ லுயிர்பருகுங்.... ...............................※
கூறறத்தின் வாயிற் குறுகி டாதே. ........................ .....※
சொல்லு மனமு மிறந்துநின்ற ...........................................※
சோதிநா மென்று சுகிக்கவல் லீரோ ......... உக. அடிஆறு.
பாண்டியுரைவாரமுற்றிற்று.

---

கூ0அ - வது,

# பார்ப்பானும்பறைச்சியும்.

---

குறள்வெண்செந்துறை.

அன்னமயமீதுடம்பு வறிவானந்தபோதமேயெங்கு..........※
மென்னேபிராமணனீரோ யெறப்போவென்குதிங்காளை..(க)

சோதியாய்நின்றதிங்கொன்று சொல்லுமுடம்பிதுசோறு
சாதியாய்நின்றதிங்கேது சாயப்போவென்குதிங்காளை..(உ)

பூண்டவுடம்பிதுபூதம் பரிபூரணமானதுபோத..................※
மாண்டேபிராமணனீரோ யகலப்போவென்குதிங்காளை..(ங)

சுக்கிலஞ்சோணிதமன்றித் தோற்றுங்குலமுண்டோசொல்லீ
ரொக்குலநல்லதென்றுரைத யெறப்போவென்குதிங்காளை (ச)

இறைச்சியெலும்புதோலன்றி யெனக்குமுனக்கும்வேறுண்
டோ-பறைச்சிபோவென்றுண்டாய்பார்ப்பான் பண்டேநீ
பேய்கொண்டாயாதே............ ............... .. ................(ரு)

இருவருமொருவழிபோகச்சே யெறப்பாராப்பார்ப்பானே
னவிலங்கென்று - னிருவர்விலங்கிலும்வழிவிலங்காதென் றே
னெத்தாலென்றுனுமத்தாலென்றேன்....... ....................(சு)

உடலுக்குடல்பொயல்லவொன்றே யுண்ணின்றசோதிவிலங்
கவொன்றே - வடவைப்பிராமணனீரோ யகலப்போவென்கு
திங்காளை.....................................................எ. அடிஆறு.

ஜிக,



உ

கணபதி துணை.

௬௬ - வது.

# பறைச்சியும்பறையனும்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பரமான மதுவுண்டு பரவச னும்படி........................⁕
பாதங்க டவைதந்தா ராரோடா பறையா.......... .... ..........⁕
வரமான குணமூன்று மழியவே யருள்செய்த..............⁕
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி... ..... .......(க)

மெய்ஞ்ஞான மதுவுண்டு மெய்மறந் திருக்கவே. ;..........⁕
மேலான பதந்தந்தா ராரோடா பறையா.........................⁕
வஞ்ஞான மழியவே யறிவினை யருள்செய்த...... ..........⁕
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி...............(உ)

எண்ணிறந்த நரம்புகளு மிறைச்சிகளு முடைய............⁕
விந்திரியப் பொந்திரிய வழித்தாரார் பறையா..............⁕
கண்ணெதிரே யெழுந்தருளிக் கலியுகத் தின்றெடுத்துக்..⁕
கரையேற விட்டாரென் றறியாயோ பறைச்சி....... ....(௩)

ஏற்றத்தாழ் வின்றி வரம்பொன்றுங் காணுமே..............⁕
யெங்கும் போதவெள்ள மாவானேன் பறையா............. ⁕
வாற்றைத் தவையிலே தேக்கினன் காவிலே..... ..... ..........⁕
யடைய வொதுக்கினேன் காணேடி பறைச்சி.............. .(ச)

சோதிமந் திரமுண்டு சுகியாமே சுகிக்கின்ற......................⁕
வாதிமந் திரந்தந்தா ராரோடா பறையா...... ........ ........⁕
வாதியந் தமுமில்லா வறிவானந் தத்தேவர்...................⁕
பாதமென் றவைதந்த தறியாயோ பறைச்சி.......... ......(ரு)

தன்னைத்தா னறியாத சாதியை மிகவுண்ணத்.................❊
தாவிணை தலைமிசை தந்தாரார் பறையா ................❊
யன்னத்தால் வருங்கோச மறிவன் றென்றிடு...............❊
மானந்த நாடனென் றறியாயோ பறைச்சி................(௬)

கருமறை யும்படி திருமந் திரமுண்டு...........................❊
களிக்கவே பதந்தந்தா ராரோடா பறையா.....................❊
வருமறை முடிவிலு மறியவொண் ணாதிடு ...................❊
மானந்த நாடனென் றறியாயோ பறைச்சி.................(௭)

ஊணைக் கழித்துண்மை யாமந் திரமுண்ண.....................❊
யுபதேசந் தந்தவ ராரோடா பறையா...........................❊
வாணைக் கருள்செய்ய வன்றுவந் துதவிய ...................❊
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி............. (௮)

இருவினை யானது வேரறப் பார்த்துன்னை......................❊
யிப்பிறப் பறுத்தவ ராரோடா பறையா .........................❊
சுருதிக டேடியு மறியவொண் ணாதவத்.........................❊
துய்யநற் சோதியார் காணேடி பறைச்சி..... ........... (௯)

அன்றான வறிவுதந் தறியாமை தவணப்போக்கி.................❊
யகம்பிர்ம்ம முனக்களித்தா ராரோடா பறையா................❊
குன்றாத மெய்ஞ்ஞான நன்றாக வருள்செய்யுங்.............❊
கோதில்சுக வப்பனென் றறியாயோ பறைச்சி.............(௰)

சாதிகுல பேதமறச் சங்கை யறத்தெரிந்து.........................❊
சற்ஞான வுபதேசந் தந்தாரார் பறையா........................❊
நீதியிலு லுணர்வேயாய் நித்தசுத்த மாகிய.......................❊
நின்மலனு மப்பனென் றறியாயோ பறைச்சி............(௰௧)

குன்றாத மெய்ஞ்ஞானங் கொணர்ந்துனக் கருள்செய்திங்❊
கொன்றான வுண்மையை யுரைத்தாரார் பறையா..........❊
சென்றார்தம் போதத்தைத் தெளிவுறக் கண்டிடி.............❊
லென்றுமு மவனென்றிட் டறியாயோ பறைச்சி ........(௰௨)

பறைச்சியும்பறையனுமுற்றிற்று. ஆ அ௱உ௬.



உ

கணபதி துணை.

௱ - வது,

# சாற்றுபறை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பொன்னையொழி யச்*சவடி காறையிலை யாற்போற்...*
புவனங்கள் பதினாலு மிருந்தபடி பார்க்கி...... ...... *
லென்னையொழி யப்புவன மேதுமிலை யென்றிட்..........*
டிரவுபக லனவரத மறையுமேடா பறையை.......... ....(௧)

ஆங்கார வன்னியனா யரசழியப் பொருதிட்.............. ....*
டவருடைய மைந்தனையு மறவச்சிறை வைத்து.... ..........*
வோங்கார வடிவான தன்மையதே யென்றிட்...............*
இலகுதொறு மோயாதே யறையுமேடா பறையை. ..(௨)

இயமமென நியமமென விரட்டைமதி விட்டு...................*
விதயபுண்ட ரீகமெனு மில்லதனுக் குள்ளே.............. ....*
பயனமுத லமரரொலா மடிகள்பணிந் தேத்த....................*
வறிவுநிட ரரசரசென் றறையுமேடா பறையை..........(௩)

ஊனவடி வாகவுண ரும்மதியை விட்டு........ ...............*
வுண்மையுண ரும்மதியை யுள்ளுறவே நிறுத்தி.... ..........*
ஞானவடி வானவனே நானவனே யென்று.................. ...*
நாடோறு நாடோறு மறையுமேடா பறையை..........(௪)

ஈதுமலா வறிவதனுன் யான்மறையோ னென்றிட்.........*
டெருதுபோ லியாகா திகன்மதன்ம மெடுத்துப்...... ....*
பேதமெனும் படுகுழியில் விழுந்துபல பிதற்றும்.........*
பித்தினையு மறுத்தோமென் றறையுமேடா பறையை (௫)

---

* சவடி இத்தேசத்திற் சவளியெனவழங்குகின்றது.

எடுப்பதொன்று மிடுவதொன்று மன்றுகிடீர் பிரம..... ✻
மேழைச்சன முழுன்றறுக்கு மாயத்தானம் போலே...... ✻
கொடுப்பதொன்றுங் கொள்வதொன்றுமன் றுகிடீர்பிரமங்
கோதிலறி வானதென் றறையுமேடா பறையை......... (௬)

அறிவான வடிவுதவண யறியாமை யறைத்திட்....... ......... ✻
டகமனித னென்றிடுமவ் வவமானங் கழிய...... ......... ..... ✻
நெறியான வறிவுதரு நின்மலனு ரருளா........ ............... ✻
னித்தசுத்த மானேமென் றறையுமேடா பறையை ......(௭)

வானுதி பூதமெல்லா மாயையாலே வளர்த்து.................. ✻
வடிவுதொறு மறிவாகி வளர்வுகுறை வின்றித்......... ........ ✻
தானேயா யுலகனைத்துந் தன்னில்வே றில்லைத்........ ...... ✻
தான்சேரா னுலகமென்று சாற்றுமேடா பறையை....(௮)

பொய்யாய மாயையினைப் புவனமுழு தாக்கிப்................ ✻
புத்தியெனு மந்திரித னேடுபுவி யாள.......................... ✻
மெய்யாய வறிவுகிட ரரசாள்வ தென்று.......................... ✻
வீதிதொறும் விளங்கிடவே யறையுமேடா பறையை (௯)

புகழிலங்கு மறிவானும் பூமச்சோதி யருளாற்.............. ✻
புவனங்கள் பதினுலும் பொய்யெனவே யுணர்ந்து......... ✻
துகளின்மறைத் தமிழ்மாலை பத்திவணயுந் தொடுத்துத்.. ✻
தோவின்மிகச் சாத்திரமென் றறையு ✻ மேடாபறையை.௰

ஆ௳-அ௱௩௰௬.

---

சாற்றுபறைமுற்றிற்று

---

✻ எடார்களௌன்பதளடாவென பன்மையொருமையாய்வந்தவழுவமைதி.





உ

கணபதி துணை.

# ௱௪௰௯-வது, திருவுந்தியார்.

கலித்தாழிசை.

அஞ்ஞான காரிய மனைத்தையு மறவிட்டு......................... ❊
விஞ்ஞான மானேமென் றுந்தீபற.............................. ❊
வெளியாகி நின்றேமென் றுந்தீபற.......................... (௧)

முடியாத பிறவிகண் முடிந்திட மாயையைத்....................... ❊
துடியாம லறுத்தோமென் றுந்தீபறத்........................... ❊
துரிசற்று நின்றேமென் றுந்தீபற............................(௨)

போதத்தை யுணராதே பொல்லாத மாயையாற்.................. ❊
பேதத்தை யுணர்ந்தோமென் றுந்தீபற......................... ❊
பேதமும் பிரமமென் றுந்தீபற...................................(௩)

முன்செய் தவத்திலே முயன்றவப் பெருமையாற்.............. ❊
பின்சாதி கழிந்தோமென் றுந்தீபற............................... ❊
பிரமமே யானேமென் றுந்தீபற.................................(௪)

அதுவேகா ணிதுவென்றான் சூரிய னருள்செய்ய............... ❊
விதுவது வாகுமென் றுந்தீபற.................................... ❊
விலக்கண புகுந்ததென் றுந்தீபற................................(௫)

தொம்பதந் தனிலுள்ள தூகளினை யறுத்தக்காற்............ ❊
றம்பத மறிவேயென் றுந்தீபற..................................... ❊
தாக்கற்று நின்றேமென் றுந்தீபற...............................(௬)

தற்பதந் தன்னிலுஞ் சபலத்தைக் கழித்தக்கா.............. ❊
லிற்பது போதமென் றுந்தீபற.................................... ❊
நீக்கியொன் றில்லையென் றுந்தீபற............................(௭)

அசிபதந் தனக்குள்ளே யவனேகா ணிவனென்ன ........ ...*
வசிவந்தோன் றனேமென் றுந்தீபற ................................*
வொழிவற நிறைந்ததென் றுந்தீபற .............................. (அ)

பாக்கியத் தாலேநாம் பழமறை மொழிந்திட்ட ...............*
வாக்கியங் கேட்டோமென் றுந்தீபற ...............................*
வரவுபோக் கற்றேமென் றுந்தீபற ..................................(௯)

அக்கண மறிவாக வடிபிணை தருவார்க்குத் .....................*
தெக்கவண காணேமென் றுந்தீபறச் ............. ........... ......*
செய்வதொன் றில்லையென் றுந்தீபற ............................(௰)

*உந்தி பறபெண்கா ளுந்தீபற ........ .... ......... ..............*
வுணர்வேநா மானேமென் றுந்தீபற .........௰க, ஆ-அ௱௰.

திருவுந்தியார் முற்றிற்று.

---

## ௱உ-வது, அநுபவமாலை.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பொங்கு கானல் புனலாய வண்ணமும் ..............................*
போத மேபேத மாகி யதுபுரிந் ......................................*
தெங்கு நாமறி வாகி யிருந்ததா..... ................ ..............*
லீதென்றீ தென்றென லாவ துண்டோ.... ......... .. ...(க)

சமய மாறுக்குஞ் சத்தா மொளியதாய்ச் .........................*
சாக்கி யாகி யிருந்த விடத்திலே.... ..... .... .....................*
யமையு மாசை யவற்றிற் பிதற்றைவிட் .........................*
டாறி ளுருக் கலந்தவ தானுண்டோ....... .....................(உ)

அஞ்சு கோச வரவண யழித்திட்டு....... .... ..... ...............*
வானந்த வறி வாசிய் வாசையும் .....................................*
வஞ்ச மாகு மதுவிட்டு வாழ்வார்க்கு ......... ................ *
மாய வாழ்வை மதிப்ப தினியுண்டோ.............................. (ஙு)

---

*உந்திபறபெண்காளென்பது-ஒருமையன்மையுமுப்படத்தவழுவமைதி.

கல்வி யென்பதோர் கட்டை யறுத்து ............ ✳
காமன் வாழுங் கருக்குழித் தூர்த்தே ............ ✳
யலையிலா வுணர் வாயிட் டிருந்தா ............ ✳
லமரர் வாழ்பதி யிற்புக வுண்டோ ............ (௪)

காம கோபப் பெருங்புலி வாழுங் ............ ✳
கன்ம காண்ட மெனுங்காடு வெட்டி ............ ✳
யோமெ னும்பொரு டன்னை யுணர்ந்தே ............ ✳
யுண்மை யானூர்க் கொருகுறை யுண்டோ ............ (௫)

தோற்று மாயத் துவக்கை யறுத்துத் ............ ✳
தூய்ய போதச் சுகத்தினை யுண்டு ............ ✳
காற்றி லாவிடங் கண்டிட் டிருந்தாற் ............ ✳
கற்ப னையின் கருத்தழி யாதோ ............ (௬)

வான ழிந்து மகானு மழிந்தபின் ............ ✳
மாயை தானு மழிந்து வழக்கற ............ ✳
நான ழிந்தபின் னானது வானா ............ ✳
னானா னென்பதோர் நாசந்தா னுண்டோ ............ (௭)

சுருதி யந்தமாஞ் சுத்த சுகத்தைச் ............ ✳
சோம்பை விட்டுச் செவியாரக் கேட்டு ............ ✳
ஸ்மிருதி யாற்றெளி வாக வுணர்ந்தான் ............ ✳
மீண்டுபோ தென்னும் வேதனை யுண்டோ ............ (௮)

எரியின் முன்னவ நீத மதுபோ ............ ✳
லெல்லா மேகபோ கத்தி லுருக்கிச் ............ ✳
சரியி லாதசத் சித்தா யிருந்தாற் ............ ✳
றுமியா மென்னுந் தங்குத லுண்டோ ............ (௯)

போக்கி னோடு வரவு மிறந்து ............ ✳
பூரண போதம தாகிப் பொலிந்து ............ ✳
வாக்கி னோடு மனமு மிறந்தால் ............ ✳
வாசகஞ் செய்ய லாவதொன் றுண்டோ ............ (௰)

அநுபவ மாவை யையி ரண்டையு ..........................*
மத்தன் பூமனற் சோதிதாள் சாத்தி ..........................*
யநு பவவழி மாள வுரைத்த ..........................*
வொப்பி லாதார்க் கொருகுறை யுண்டோ ௯க, ஆ-அசுக.

அநுபவமாவைமுற்றிற்று.

---

## ௱ந-வது, அறிவு.

### இரட்டைக்குறள்வெண்செந்துறை.

போகாத மாயையைப் போக்கிட லாவதும் ..........................*
புண்ணிய பாவம் புறத்திட லாவது ..........................*
மாகா தழியா திருந்திட லாவது ..........................*
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ ..........................(க)

என்னிலே யாவையுங் கண்டிட லாவதும் ..........................*
யாவையு மென்னையுங் கண்டிட லாவது ..........................*
மன்னியங் கண்டிலோ மென்றிட லாவது ..........................*
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ ..........................(உ)

மோகாதி யெல்லா முறித்திட லாவது ..........................*
முற்றுமுற் கன்மங்க ளற்றிட லாவது ..........................*
மாகா தழியா திருந்திட லாவது ..........................*
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ ..........................(௩)

இந்தப் பிறப்பினின் றேறிட லாவது ..........................*
மேகாந்த மாகி யிருந்திட லாவது ..........................*
மந்தக் கரண மறுத்திட லாவது ..........................*
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ ..........................(௪)

நற்செய் தவங்களு மற்றிட லாவது ..........................*
நானெனு மாங்கார நச்சற லாவது ..........................*
மற்சனை யெல்லா மறவிட லாவது ..........................*
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ ..........(௫)-ஆ-அசுரு.

அறிவுமுற்றிற்று.



உ

கணபதி துணை.

# ஸ்ரீசு-வாநு, தச்சராண்டு.

## இரட்டைக்குறள்வெண்செந்துறை.

என்வணை யறியா வறியாமை போயிட......※
வேகமா யின்ப மெனக்கே யருள்செய்து......※
பின்ன மில்லாத பிரமநீ யென்றிடப்......※
பேச்சற்ற மெய்ப்பொரு ளானேமே யப்பா......(௧)

கண்ட கருக்குழி மாளும் படிக்குக்......※
கருவணையி னுற்கலந் தாண்டு கொண்டு......※
பண்டை வடிவது நீயானு யென்றிட்டுப்......※
பார்க்கப் பரமா யிருந்தோமே யப்பா......(௨)

கருதும் பொருளிவை யெல்லாங்......※
கானலி நீரொன்று சொல்லி......※
யொருவ னுணர்த்த வுணர்ந்து......※
வொப்பற்ற மெய்ப்பொரு ளானேமே யப்பா......(௩)

தப்பா மறைப்பொரு டன்னைத்......※
தானே யெனக்குத் தலைவ னளித்திட......※
வொப்போத வில்லா வுணர்வேநா னெனபின்......※
னொன்றிய மெய்ப்பொரு ளானேமே யப்பா......(௪)

பேதப் பிணக்கற வெண்ணிப்......※
பேராத துன்பப் பிறவி யறுத்திடும்......※
போதப் பொருளே யுணர்த்தப்......※
பொய்யிலா மெய்ப்பொரு ளானேமே யப்பா......(௫)

தேடுந் தனமுந் திடமாம் பிராணனுங்......※
கூடு முடலுங் குருபர னர்க்கென்று......※
பாடு மறையின் படிபரன் கைக்கொள்ள......※
நீடும் பரமாகி நின்றோமே யப்பா......(௬)

தோற்று முலகவை யெல்லாந்......................❊
தோற்ரு திருக்குஞ் சுகமேவடி வென்னப்........................❊
பேற்று முறையுங் கடந்த..........................❊
பிரமமே நாமா யிருந்தோமே யப்பா.....................(எ)

அத்தி கிரியிது மல்ப ரதிவிது.............................❊
மாதி யருளாளர் தாமா யிருக்கவே............................❊
யெத்திசைக் கேதெய்வ முண்டென்று சொல்லிடு..........❊
மேழையர் தங்காசு கொள்ளோமே யப்பா..................(அ)

அண்ட மனைத்துமாய் நின்ற பரனாந்த ..........................❊
மாகம வாக்கியந் தன்னை யுணராதே .............................❊
பிண்ட மதனையே நானென்று பேசிடும்..............................❊
பேதையர் தங்காசு கொள்ளோமே யப்பா ....................(கூ)

கூடும் பரனுங் குருபரன் பாதமே................................❊
நீடு மடியவர் நெஞ்சத்து ணின்றிடத்..............................❊
தேடுந் தனமுஞ் செகமுந்தான் மெய்யென்று ...............❊
நாடு மவர்காசு கொள்ளோமே யப்பா...... ய - ஆஎகூ.

தச்சராண்டு முற்றிற்று.

---

❊ தச்சராண்டென்பதோர்கூட்டம்.

# ராரு-வது, பாம்பாட்டு.

குறள் வெண்செந்துறை.

ஆதியு மந்தமு மேது மில்லா.......................................❊
வானந்தத் தேவ ராவண யாவண.......................................❊
சோதியுட் சோதிநா மானே மென்று...................................❊
சுருதிகள் பாடநின் ருடாய் பாம்பே .............................(க)

சுருதியுங் கருதிடாச் சுகமேகா ணீயென்று.........................❊
சொல்லாதே சொன்னவ ராவண யாவண...............................❊
கருதிய வுலகினிற் கற்பவண்க ளெல்லாங்.........................❊
கானலி னொன்றே யாடாய் பாம்பே........................(உ)

ஆங்கார மோகங்க டான்க ழிய ....... ※
வழியினை கூட்டினு ராவணை யாவணை ....... ※
யோங்காரத் துட்பொரு ளாகி நின்ற ....... ※
வுண்மைநா மானோமென் றாடாய் பாம்பே ....... (௩)

நாரிய ரென்னும் வலையிற் பட்டு ....... ※
நானென தென்று நகுவ தீர ....... ※
வாரியன் வந்தடி வைத்த போதே ....... ※
யானந்த மானோமென் றாடாய் பாம்பே ....... (௪)

மனமுத லான கரண மெல்லா ....... ※
மாய வருள்செய்தா ராவணை யாவணை ....... ※
நனவிலுங் கனவிலுஞ் சுழுத்தி யிலு ....... ※
நானேதா னானேனென் றாடாய் பாம்பே ....... (௫)

கலையிற் சரக்கினைக் கண்டு நான்போய்க் ....... ※
காதலித் தெங்குங் கழிந்தி டாதே ....... ※
மடியிற் சரக்கினைக் காட்டித் தந்த ....... ※
மாமறை பாடநின் றாடாய் பாம்பே ....... (௬)

ஒக்கலைப் பிள்ளை யுடனி ருக்க ....... ※
வூரெங்குந் தேடி யுழலு வேளை ....... ※
யக்கணம் பிள்ளையைக் காட்டித் தந்த ....... ※
வாசானைப் பாடிநின் றாடாய் பாம்பே ....... (௭)

சந்திக டோறுங் குடைவி ரித்துத் ....... ※
தப்புக்கை கொட்டும் பிடார னல்லேன் ....... ※
புந்தியுள் ளேயுறப் பார்த்த போதே ....... ※
போக்கிட மற்றோமென் றாடாய் பாம்பே ....... (௮)

கோசங்க ளென்னுங் குடமு ருட்டிக் ....... ※
குலநல மென்னுங் கொடிய றுத்துப் ....... ※
பாசங்க ளென்கின்ற பற்கள் வாங்கிப் ....... ※
பார்ப்பறப் பார்த்தோமென் றாடாய் பாம்பே ....... (௯)

அப்பத மிப்பத மென்றி ரண்டி........................................※
ஞசங்கை தீர்த்தவ ராவண யாவண........................................※
தற்பதந் தொம்பதந் தாம்பு றம்பாய்த்........................................※
தன்மய மானேமென் றூடாய் பாம்பே........................................(௰)

பிறவிக ளென்னும் பெருங்க டலைப்........................................※
பிறநெட்டுப் போந்தவ ராவண யானை........................................※
திறவிய தேசிகன் சேவ டியைச்........................................※
சேராதே சேர்ந்தோமென் றூடாய் பாம்பே........................................(௰க)

அஞ்சு முகமுடைப் பாம்பி னீரே........................................※
யாராயி னுமுக மொன்றே காணுந்........................................※
அஞ்சுவ தில்லாத் துரிய நாமே........................................※
தோன்றாதே தோன்றிநின் றூடாய்பாம்பே ௰உ ஆ அஅஅ

பாம்பாட்டுமுற்றிற்று.

---

## ௱௬-வது, நையாண்டி.

---

### இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஆரணந் தேடற் கரியா னொருபையல்........................................※
பேராமை காட்டிப் பிறவா தனசொன்னான்........................................(க)

நானா தனசொல்லி நாண மழித்தென்னைக்........................................※
கானாது காட்டிக் கழித்தானா னென்செய்வேன்........................................(உ)

நில்லா வுபாதி நிலையேநீ யென்றிட்டுச்........................................※
சொல்லாது சொல்லித் துவக்கை யறுத்தானே........................................(௩)

முடிவு நடுவு முதலுமில் லாப்பைய........................................※
லடியை நினைவுற வானந்த மானேனே........................................(௪)

கருதிக டேடியுந் தோன்றாத பையலார்........................................※
கருதிய நீயென்னக் காலாலே பாய்ந்தானே........................................(௫)

வரையொன்றி லாப்பையல் வார்த்தையைக் கேட்டுநா…※
னுரையொன்றுங் காணாத வுன்மத்த னானேனே………(௬)

எட்டா நிலத்தே யிருப்பா னொருபையல்………※
கட்டின தெல்லாங் கழித்தானோ னென்செய்வேன்………(௭)

பேச்சு முறையும் பிறவு மறுத்தென்னைத்………※
தோய்ச்சு மொழியிலே தோய்ச்சாமெய் செய்தானே(௮)

விதியாலே காடேறி விறகோடே போவேனைப்………※
புதியானோ ராண்டிபின்னைப் போகாய்வா ராயென்றான் (௯)

குரியா முடம்போடே கடைகொள்ளப் போவேனைப்……※
பெரியானோ ராண்பிள்ளை பிறவாதெல் லாஞ்சொன்னான் ※

விள்ளேன்விள் ளேனென்று வேண்டிநிற்றெல் லாஞ்சொல்லி
யுள்ளே கொடுப்புக் குடம்பைக் கழித்தானே………(௰௧)

கருதி யிருக்கிலுங் கண்ணுக்கெட் டாப்பையல்………※
கருதி முடிவிலே தோன்றினா னென்செய்வேன்……(௰௨)

ஆரணந் தேடற் கரியா னொருபையல் ………※
காரண நீயென்னக் காலாலே பாய்ந்தானே………(௰௩)

மருவ வடிவில்லான் மானமில் லாப்பைய. ………※
லொருவன் கிடையென்னை யுள்ள மழித்தானே………(௰௪)

முன்னில்லைப் பின்னில்லை மூலமில் லாப்பைய………※
லென்னில்லைத் தன்னில்லை யென்றானா னென்செய்வேன்.

சோதித்துப் பார்க்கிலேன் சுருதிக டேற்றிலேன்.………※
பேதிக்கப் போகாத பிரமநா மானேனே………(௰௬)

இட்டிடத் தூங்கிலே னேதேனுஞ் செய்கிலெ………※
னொட்டொன்று மில்லாத வுணர்வுநா மானேனே…..(௰௭)

ஓட்டிலே பிச்சையேற் றுண்டா னொருபையல்………※
வீட்டிலுங் கொண்டுபோய் வெளியிலே விட்டானே.(௰௮)

பண்டில்லை மேலில்லைப் பாரீரிப் பையலார்.................※
பெண்டிரோ டென்றும் பிரியா வுணர்வெனே......(௰௯)

கண்டதுங் கேட்டதுங் காணாத போதிலு........................※
முண்டதுங் கொண்டது முனக்குண்டோ வென்றானே(௨௰)

பொறியுற் றிருக்கிலென் புலனைச் செயிக்கிலெ.............※
னறிவைப் பிரியாத வானந்த மல்லெனோ................ .(௨௧)

நெஞ்சிலே நெஞ்சிலே நிற்பா னொருபைய.......................※
னஞ்சு மறுத்தறி வாக்கினா னென்செய்வேன்..........(௨௨)

கருவை யறுக்கிலென் கழலிணை சூட்டிலே......... .........※
னுருவை யில்லாப்பைய னுறக்க றவிர்த்தானே...... ...(௨௩)

தன்னை யிகந்து தனியே யிருப்பானை......... ................※
யென்னெனச் சென்றுநா னென்னை யிகந்தேனே....(௨௪)

நாட்டார்தா மென்செய்வார் நமனார்தா மென்செய்வார்..※
வீட்டார்தா மென்செய்வார் வீணே திரிவானை..........(௨௫)

அஞ்சுவ தில்லை யடங்கு வதுமில்லைத்............................※
தஞ்சமில் லாப்பைய னொன்றோன்றி யானானே..........(௨௬)

உள்ளத்தி னுள்ளே யுதிப்பா னொருபையல்.....................※
வள்ளலைக் கண்டுநான் வரவுபோக் கற்றேனே.........(௨௭)

ஏதமில் லாப்பைய னென்னையுந் தானாகப்.......................※
போத வுணர்த்திப் புகலு மறுத்தானே........... ..... (௨௮)

சரமே கலமாகக் கண்டிடமெல்லா மிரந்துண்டு...... ...... ※
பரமே பரமாகப் பற்றற் றிருக்கநாம் பெற்றோமே...(௨௯)

அடியின்றி முடியின்றி நடுவு மின்றி.............................. ※
யாகாசந் தானின்றி யங்ஙு னேயாய்..................................※

வடிவின்றி நின்றதோர் வடிவு தன்னை.... ..........................※
மறைகளெல் லோதேடி மயங்கு தின்னம்.....௩௰, அடி ௩௱௰௮

நையாண்டி முற்றிற்று.

